மாதரையே மதித்துச் சேர்வார்கள். (இதுவே விதி. இதற் கென் செய்வார்கள்?) (72)

(வெண்பா)

ஆனை மதத்தை அடக்கி அதற்குமேல்
ஊனமில்சிங் கத்தை ஒடுக்குவார்—மானவர்கள்
மன்மதனார் வல்லமையை மாற்றுவா ரில்லையென் பேன்
என்னவிடை சொல்வார் இதற்கு.

(உரை) மானவர்கள் ஆனை மதத்தையும் அடக்குவார்கள்; அதற்குமேல் சிங்கத்தையும் ஒடுக்குவார்கள். மன்மதன் வல்லமையை மாற்றுகிறவர்கள் ஒருவரும் இல்லையென்று சொல்வேன். இதற்கு யார் என்ன விடை சொல்வார்களோ தெரியவில்லை. (73)

(வெண்பா)

எதுவரையில் ஆடவன்மே லேந்திழைகண் பாயா
ததுவரையில் நல்லவன் ஆவான்—அதுவரையில்
ஐம்புலனை வெல்லுவான் ஆன்றோர்க் கடங்குவான்
பம்பியவஞ் செய்யான் பரிந்து.

(உரை) எதுவரையில் ஆண்மகன்மேல் பெண்பிள்ளையின் விழியம்பு பாயாதோ, அதுவரையில் அவன் நல்லவனாயிருப்பான்; ஐம்புலனை அடக்கி ஆளுவான்; பெரியோர்க்கு அடங்கி நடப்பான்; நெருங்கிச் சென்று தகாத காரியங்களை விரும்பிச் செய்யமாட்டான். (74)

(வெண்பா)

மனத்தி லொருகரும மைவிழியார் செய்ய
நினைத்தால் அதனை நிறுத்த—அனைத்துலகும்
செய்து திகழ்பிரம தேவனுக்கு மாகாது
மெய்யிதுமெய் மூக்காலு மெய்.

(உரை) மை தீட்டிய நெடுங்கண் மாதர்கள் ஒரு காரியத்தைச் செய்யவேண்டு மென்று தீர்மானித்தால், அதைத் தடுக்கப் பிரமதேவனாலு முடியாது; இது முக்காலும் உண்மையாம். (75)

(வெண்பா)

மதன நெருப்புடலில் மன்னு திருந்தால்
விதனமின்றி யாரும் வியன்பண்—டிதனுவான்
அற்புதவா னுவான அருங்குலவா னுவானோர்
சற்குணவா னுவான் தழைத்து.

(உரை) மன்மத விகார நெருப்பு ஒருவனுடைய உடம்பிற் பற்று திருந்தால், அவன் எவனானாலும் பெரிய பண்டிதன் ஆவான்; மகத்துவ முடையவனுவான; உயர் குடியிற் பிறந்தவனுவான்; குடும்பம் வளர்ந்து நற்குணம் உடையவன் ஆவான். (76)

(வெண்பா)

நாரியர்வேற் கண்கள் நரககபா டந்திறக்கும்
பேரியலுங் கோல்போற் பிறங்குவதால்— நாரியர்வாழ்
வோங்குசமு சார ஓலிகடலி லாழ்ந்தவர்க்குள்
நீங்கின்றி வாழ்ந்தவனர் செப்பு.

(உரை) பெண்களின் வேற்கண்கள் நரகவாயிற் கதவைத் திறக்கும் பெரிய கோல்போல் விளங்குவதனால், அவர்களுடைய வாழ்வாகிய சமுசார சாகரத்தில வீழ்ந்து ஆழ்ந்த ஆண்மக்களில் தீங்கில்லாமல் வாழ்ந்தவன் யாவன்? நீ சொல்வாயாக. (77)

(வெண்பா)

உணங்கி முடமாய் ஒருகண் குருடாய்
அணங்கி னலிந்தகல்வா யாகி—வணங்கினவால்
அற்றநாய் பெண்ணாய்பின் அன்பாயோ டுங்காமற்
குற்றவன்மை யாரறிவார் ஓர்ந்து.

(உரை) சரீரம் மெலிந்து, கால் ஊனமாய், ஒருகண் தெரியாமல், நோயால் வாடி, திறந்த வாயுடையதாய், வளைந்த வால் அறுந்த ஆண் நாய், பெண்ணாயைக் கண்டவுடன் அதன் பின் அன்பாய் ஓடும். ஆகையால், மன்மதன் வல்லமையை யாரால் ஆராய்ந்து அறிவதற்கு ஆகும்? (78)

(வெண்பா)

மன்மதன்வென் றிக்கொடியாம் மங்கையரை நிந்தித்துத்
துன்மதிசேர் மாந்தர் துறப்பார்கள்— அன்னவரை
மன்மதன்கோ பித்து மழித்துமயிர் நீட்டிவிடும்
ஜென்மதண்டஞ் செய்வான் தெரிந்து.

(உரை) மன்மதனுடைய வெற்றிக்கொடி போன்ற மாதர்களைத் துஷ்டபுத்தியுள்ள ஆண்மக்களே துறந்துவிடுவார்கள். அப்படிச் செய்யும் அவர்களை மன்மதன் கோபித்து, அவர்களுடைய தலை மயிரை மழித்து மொட்டைத் தம்பிரான்களாக்கியும், அதை வளர்த்து நீட்டிச் சடைத் தம்பிரான்களாக்கியும் ஜன்மதண்டனை தெரிந்து செய்வான். (79)

(கலிவெண்பா)

பராசனுங் கோசிகனும் பைந்தொடியார் தம்மால்
தராதலத்திற் பட்டழிந்த தன்மை— அராவணிந்த
ஈசன் பெருமையிழந் தீடழிந்த தன்மையிவை
தேசமெங்கு நன்றாய்த் தெரிந்தவைதாம்— வாசத்
தயிர்பாலெய் யோடன்னம் தக்கபடி யுண்போன்
செயிர்சேர் புலனடக்கஞ் செய்து— மயலறுத்தல்
ஆகாது குன்றம் அலைமேல் மிதக்குதலும்
ஆகாத வாறென் றறி.

(உரை) பராசர முனிவனும் விசுவாமித்திரனும் முறையே மச்சகந்தி மேனகை என்னும் மாதரால் இவ் வுலகில் மானமழிந்த தன்மையும், ஆலாபரணனுகிய சிவன் தாருகாவனத்து முனிவர் மனைவியரால் பெருமையிழந்த மாண்பும் இந்தப் பூலோகமெங்கு நன்றாய்த் தெரிந்த விஷயங்கள்தாம். வாசனையான கட்டித் தயிர் பால் நெய்யோடு அன்னத்தைத் தக்கபடி உண்ணும் ஒருவன், குற்றமுள்ள ஐம்புலனடக்கிப் பெண்மயக்கத்தைப் போக்குதல் மலை, அலையில் மிதக்குதல் ஆகாது போலவே, ஆகாத காரியமாம். (80)

---

## 6-வது அதிகாரம்

## இளவேனிற் காலச் சிறப்பு

(வெண்பா)

இளவேனில் வந்தவுடன் எல்லாம் அழகாய்க்
களகளவென் றோங்குமந்தக் காற்று—குளுகுளுவென்
றின்பமாய வீசும் இளங்குயில்மாக் கோடுகளில்
இன்பமாய்க் கூவும் இருந்து.

(உரை) இளவேனிற் காலம் வந்தவுடன் எங்கெங்கும் சோலைகளும் பிறவும் அழகாய்த் தளிர்த்துக் களகளவென்று விளங்கும். மந்தமாருதமாகிய தென்றற் காற்று, குளுகுளு வென்று இன்பமாய் வீசும். இளங் குயில்கள் மாமரக் கிளைகளின்மேல் அழகாயிருந்து செவிக் கின்பமாய்க் கூவும். (81)

(வெண்பா)

மாவின் இளந்தளிரால் மந்த இள மாருதத்தால்
கூவு குயிலின் குரலாலே—மேவுமிள

வேனில் விரகரை வீட்டுமகா லத்திலமு
தேனும் விடமாம இழிந்து.

(உரை) மாமரத்தின் கொழுந்திலைகளாலும், மெதுவாய்ச் சில்லென்று வீசும் தென்றற் காற்றாலும், கூவுகின்ற குயிலின் குரலாலும், இளவேனிற் காலமானது, காமுகரை வருத்தும். அகாலத்திற் கிடைத்த அமுதமும் தாழ்ந்த விஷமாய்விடும். (82)

(வெண்பா)

கூவு குயிற்குரலால் கோதகன்ற வெண்ணிலவால்
பாவு கொடி படர்ந்த பந்தலால்—மேவிரவிற
பாவையர் கூட்டுறவாற் பன்னுசுகந் துன்னுவார்
மாவேனி லிற்சிலரே வாய்ந்து.

(உரை) கூவுகின்ற குயிலின் குரலாலும், மாசற்ற வெண்ணிலவாலும், பரவிப்படர் கொடியின் பந்தலாலும, பாவையரோடு சொன்னயம் பேசிக் கூடியிருத்தலாலும் இரவிற் பொருந்திய சுகானுபவஞ் செய்பவர்கள் வேனிற்காலத்தில் சிலரே யாவார். (83)

(வெண்பா)

குயிற்பேடு மாமலரைக் கூறுமவி சென்று
வெயிற்கொதுங்கிப் பார்த்திருக்கும வேனில்—இயற்கையிது
வாகை மலரை வழிப்போக்கன் மேல்வாரி
ஓகையொடு தென்றலிறைக் கும்.

(உரை) பெட்டைக் குயில் மாமலர்க் கொத்துக்களை யாகபலியென்று எண்ணி வெய்யிலுக் கொதுங்கிப் பார்த்திருக்கும். இது இளவேனிலின் இயற்கை விசேடம். தென்றற் காற்று வாகைமலரை வாரி வழிப்போககன்மேல் உல்லாசமாய் இறைக்கும்.

(வி - ரை) மாம்பூ யாகபலி யென்றால், மாந்தளிர் யாகாக்கினி. காமுகர்களுடைய விரகாக்கினியே யாகாக்கினி; அதில் இடும் ஆகுதியே மாமலர். (84)

(வெண்பா)

சக்களத்திக் காய்ச்சலால் தாங்கொண்ட கோபத்தை
மிக்க விளந்தென்றல் வீசுவதால்—மைக்குழலார்
மாற்றுவார் தங்கணவர் மன்னுமிடத் திற்செல்வார்
காற்றிற் குடண் டோர் கனம்.

(உரை) மாற்றாள்மேல் தாங்கொண்ட காய்ச்சலால், கணவன்மேல கொண்ட கோபத்தைக் கருங்கூந்தல் மாதர், மிகவும் இனிய தென்றற்காற்று வீசுவதால், மாற்றித் தங்கணவர் தங்கியுள்ள இடத்திற்குச் செல்லுவார். இதனால் கண்ணுக்குத் தோன்றாத காற்றுக்கும் கோபமாற்றும் வல்லமை உண்டு என்பது புலப்படுகின்றது. (85)

(வெண்பா)

மாமரத்தின் பூக்கள் மணம்வீசும் வண்டுகள்தாம்
காமாரப்பூத் தேனைக் களித்துண்ணும்—பாமரருங்
காற்றின்ப நாடிப்பூங் காவனத்திற் சேர்ந்திருக்கத்
தோற்றுமிள வேனிற் சுகம்.

(உரை) மாமரத்தினுடைய தேனமர் மலர்கள் மணம் வீசும்; வண்டுகள் சோலைகளிலுள்ள மலர்களின் தேனை உண்டு களிக்கும்; மூடர்களுங் காற்றுச்சுகத்தை விரும்பிப் பூஞ்சோலையிற் சேர்ந்திருப்பார்கள். இப்படி இளவேனிற் சுகம் விளங்கியிருக்கும். (86)

## 7-வது அதிகாரம்

# முதுவேனிற் காலச் சிறப்பு

(வெண்பா)

புதுச்சந் தனமும் புனையிழையார் கூட்டும்
மதுசசிந்து காவும் மதியும்—வெதுப்பையற
மாற்றுமிளந் தென்றலும மல்லிகையும மாளிகையுந்
தோற்றுமுது வேனிற் சுகம்.

(உரை) நறுமணங் கமழும் சந்தனமும், ஆபரணமணிந்த மங்கையரைக் கூடியிருத்தலும், தேன் சொரியும் பூஞ்சோலையும், சந்திரனும், வெதுவெதுப்பை மாற்றும் இளந்தென்றற் காற்றும், மல்லிகை மலரும், உப்பரிகையும் முதுவேனிலில் சுகந்தருவன வாம். (87)

(வெண்பா)

நல்லமணங் கொண்ட நறுமலரின் மாலிகையும்
சில்லெனுங்கால் வீசுஞ் சிவிறியும்—சொல்லரிய
வெண்ணிலவும் ஒதுமுது வேனிலின்கண் மங்கையரும்
புண்ணியர்க்கே எய்தும் பொருள.

(உரை) நல்லமணம் வீசும் புதுப்பூமாலையும், சில்லென்று காற்று வீசும் விசிறியும், புகழ்தற்கரிய புது வெண்ணிலவும், மங்கைப் பருவத்துப் பெண்களும், உயர்வாகப் பேசும் முதுவேனிற் பருவத்தில், புண்ணியஞ்செய்தவர்களுக்கே கிடைக்கும் பொருள்களாம். (88)

(வெண்பா)

சுண்ணவெள்ளை தீற்றுச் சுவர்சூழ் உபரிகையும்
வெண்ணிலவும் சுந்தரஞ்சேர் மெல்லியலும்—நண்ணுமணப்

பொற்சுண்ணத் தூளும் பொருந்துமுது வேனிலின்கண்
நற்றவர்க்கென் செய்யு நவிவு.

(உரை) சுண்ணும்பு வெள்ளை பூசின சுவர்கள் சூழ்ந்த உப்பரிகையும், வெண்ணிலாவும், சுந்தரவதியான மங்கையும், வாசனை பொருந்திய பொற் சுண்ணப்பொடியும், முதுவேனிற் காலத்தில் நல்ல தவசிகளாகிய துறவிகளை வருத்தா. (இல்லறத்தாரையே வருத்தும் என்றபடி.) (89)

---

8-வது அதிகாரம்

## கார் காலச் சிறப்பு

(வெண்பா)

மல்லிகையின் பூமணக்கும் மன்மதற்கு வாழ்வுதரும்
சொல்லும் பயோதரங்கள் தோயுமிக—நல்ல
தெனினுங்கார் காலம் இலங்கிழையார் போல
கனிவாய்த் தராது களிப்பு.

(உரை) மல்லிகைப்பூ மணப்பதாலும், மன்மதற்கு வாழ்வைத் தருவதாலும், புகழ்ந்தோதும் (பால் வீடாகிய மார்பு) மேகங்கள் பொருந்தியிருப்பதாலும், கார்காலம் ஆபரணம் அணிந்த பெண்களைப் போன்றது; இன்பந்தருவது. ஆனாலும், அவர்களைப்போல அவ்வளவு மனங் கனிந்த மகிழ்ச்சி தராது. (90)

(வெண்பா)

மயிலகவும் காட்டுமலர் மல்லிகையின் வாசம்
பயிலும்புற் றீசல் பறக்கும்—வெயின்மூடி
மேகஞ் செறியுமிவை மெத்தக் களிப்பெவர்க்கும்
ஆகுங்கார் காலத் தமைப்பு.

(உரை) மயில்கள் ஆடும்; காட்டு மல்லிகை மலர் மணம் வீசும்; புற்றில் ஈசல் பறக்கும்; வெயிலை மேகம் மூடி மந்தாரமா யிருக்கும். இவைகள் யார்க்கும் இன்பந் தரும் கார் காலத்துப் பொருந்திய விசேடங்களாம். (91)

(வெண்பா)

மேகமயில் புற்றுகளின் மேற்காளான் மூன்றாலும்
சோகமுறு வார்விரகர் சொல்லுங்கால்—வேகமாய்
மேலோடி ஆடி விரிந்துகார் காலத்தில்
மாலாடச் செய்யுமவை வாய்ந்து.

(உரை) மேகம், மயில், புற்றின்மேற் பூத்த காளான் ஆகிய மூன்றாலும் விரகர்கள் சோகமுற்று வருந்துவார்கள். மேகம் அவர்கள், மேல் நோக்கும்போது கவிந்தோடியும்; மயில் அவர்கள், நடுவில் மலைப்பிரதேசங்களைப் பார்க்கும்போது ஆடியும்; காளான் அவர்கள், கீழே பூமியைக் கவனிக்கும்போது பூத்தும், கார் காலத்திற் பொருந்தி அவர்களுக்கு விரகவேதனையை உண்டாக்குகின்றன. (92)

(வெண்பா)

மின்னலொருபால் மிகுபே ரிடியொருபால்
மன்னுசெந் தாழை மணமொருபால்—துன்னுமயில்
ஆடலொருபால் அமைந்தகார் காலத்தில்
கூடலையார் கொள்ளார் குறித்து.

(உரை) மின்னல்கள் ஒருபக்கம், மிகுந்த ஓசையுடைய பேரிடிகள் ஒருபக்கம், பொருந்திய மகிழம்பூ வாசனை ஒரு பக்கம், நெருங்கிய மயில்களின் ஆட்டம் ஒரு பக்கம், விளங்கியுள்ள

கார் காலத்தில் காதலர்களிற் கூடியிருப்பதை விரும்பாதவர்கள் யாவர்? (93)

(வெண்பா)

பேரிடி யோடு பெருமேகஞ் சூழ்ந்திருண்ட
கார்காலத் தூறல் கவிந்துமின்னல்—ஊருங்கால்
கூடியுள் ளார்மகிழ்வார் கூடாத காதலர்கள்
ஊடி யுளமழிவார் ஒய்ந்து.

(உரை) பேரிடிகளோடு பெருங் கருமேகஞ் செறிந்த கார் காலத் தூறல்மழை மனைகளில், கூடியுள்ள கணவன் மனைவியர் குதூகலிப்பார்கள். கூடாதவர்கள் ஊடிப் பிரிந்திருந்து மனம் வாடி வருந்துவார்கள். (94)

(வெண்பா)

வாடை மழையால் வருந்துகின்ற பைந்தொடியார்
மேடையை விட்டிறங்கார் மெய்நடுங்கி—ஆடவரைக்
கட்டித் தழுவுவார் கார்காலத் தன்னவரோ
டொட்டி யுறுவார் உவந்து.

(உரை) வாடைக் காற்று கொண்டுவரும் குளிர் மழையால் வருந்துகின்ற மாதர்கள் மாடியை விட்டுக் கீழிறங்காமல் உடல் நடுங்கிக் காதலரைக் கட்டித் தழுவிக்கொண்டு, கார்காலத்தில் அவர்களோடு சந்தோஷமாய்ச் சேர்ந்து பிரியாமல் இருப்பார்கள். (95)

---

## 9-வது அதிகாரம்

## மழைக் காலச் சிறப்பு

(வெண்பா)

இரவிற் சுரத இளைப்பொழிய மங்கை
சரதமுடன் கொண்டுவந்து தந்த—இரதமுள்ள
தண்ணீரைக் *கர்க்கரிககாய் தன்னொடுமா ரிக்காலத்
துண்பவனே தன்னியனென் றோது.

(உரை) இரவில் நுகர்ந்த சுரதத்தா லுண்டாகிய இளைப்பு நீங்கும்படி, மங்கை யொருத்தி மனமுவந்து கொண்டுவந்து தந்த உருசியுள்ள குளிர்நீரைக் கக்கரிக்காயுடன் (வெள்ளரிக்காயுடன்) மாரிக்காலத்தில் மகிழ்ந் துண்பவனே பாக்கியவானாவான். (96)

---

## 10-வது அதிகாரம்

## முன்பனிக் காலச் சிறப்பு

(வெண்பா)

மூன்பனியில் ஆடவர்கள் மொய்குழலார் தம்மோடு
துன்பொழிய †மஞ்சிட்டித் தூசுகட்டி—இன்பமுடன்
குங்குமச் சாந்தணிந்து கூடி மகிழ்வார்கள்
துங்கமுறு தாம்பூலந் துய்த்து.

---

* கர்க்கரிக்காய்=என்பது கக்கரிக் காயென்றும், வெள்ளரிக் காயென்றும் வழங்குகிறது.

† மஞ்சிட்டி=ஒருவிதச் சாயவேர்.

(உரை) முன்பனியில் ஆண்மக்கள் நெருங்கிய கூந்தல் மாத ரோடு துன்ப நீங்க மஞ்சிட்டிச் சாயந் தோய்த்த ஆடை யணிந்து, இன்பத்தோடு குங்குமச் சந்தனம் பூசித் தாம்பூலந் தின்று கூடிக் களிப்பார்கள். (97)

(வெண்பா)

மந்தார மாலிகையும் வாய்விரியு மொட்டுகளில்
வந்திருந்து தேனுண்ணும் வண்டுகளும்—நந்தாமற்
சேர்ந்திருக்கும் முன்பனியில் சேயிழையார் தம்மோடு
சேர்ந்திருப்போன் தேவனெனச் செப்பு.

(உரை) மந்தாரமலர் மாலையும், வாய் விரியத் தொடங்கும் அரும்புகளில் படிந்திருந்து தேனை உண்ணும் வண்டுகளும் கொடாமற் பொருந்தி யிருக்கும் முன்பனிக் காலத்தில், அழகான ஆபரணம் அணிந்த அரிவையரோடு கூடியிருப்பவன் மனிதனாயி னும் தேவனுக்குச் சமானமாவான் என்று சொல். (98)

---

## 11-வது அதிகாரம்

## பின்பனிக் காலச் சிறப்பு

(வெண்பா)

பின்பனிக் காலத்தில் பெய்வளையார் மேல்வீசி
அன்புடன் முத்தந்தந் தாடையவிழ்த்—தன்னவர்தம்
மெய்யைக் குலுக்கி மிகவசைத்து நாயகர்போல்
கையைப் பிடித்தாட்டுங் காற்று.

(உரை) பின்பனிக் காலத்தில் காற்று, வளைய லணிந்த மாதர்கள்மேல் வீசி, அவர்களுக்குக் குளிர்ச்சியாய் முத்தங் கொடு

த்து, அவர்களுடைய ஆடையைத் தளர்த்தி, தேகத்தை அசைத்துக் குலுக்கி, அவர்களுடைய நாயகர்போல் கையைப் பிடித்து ஆட்டும். (99)

(வெண்பா)

காரிகையார் தமமேல் கடுமை யுடன் மோதி
வேரிமலர்க் கண்கள் விழிக்காமல்—ஏரியலும்
கூந்தல் குலையவும் கூறை யவிழவும்
காந்துமாம் பின்பனியிற் காற்று.

(உரை) பின்பனிக் காற்று, பெண்கள்மேல் வேகமாய் மோதி, அவர்களுடைய தாமரைமலர்க் கண்களை விழிக்கவொட்டாமற் செய்து, கூந்தலைக் குலைத்து, ஆடையை அவிழ்த்து அலங்கோலஞ் செய்து கோபிக்கும். (100)

## பர்த்ருஹரி சிங்கார சதகம் உரை

முற்றுப்பெற்றது.

---

FIRST EDITION] [1000 COPIES.

உ

பரமபதி துணை

பர்த்ருஹரி சிங்கார சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

பர்த்ருஹரி சிங்கார சதகத்தின்
செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

---

| | அ. | ப. | | அ. | ப. |
|---|---|---|---|---|---|
| ரிப்பன் கானப்பாட்டு ... | 2 | 0 | 108 திருப்பதித்திருப்புகழ் | 8 | 0 |
| உரிச்சொல் நிகண்டு உரை | 8 | 0 | அஷ்டப்பிரபந்த மூலம் | 12 | 0 |
| விகவி மஞ்சரி ... | 2 | 0 | நைடதமூலம் ... | 1 ரூபா | |
| ஸ்ரீ திலகர் விசாரணை ... | 12 | 0 | சோணசைலமாலை உரை | 12 | 0 |
| அறப்பளீசுர சதகம் உரை | 12 | 0 | நால்வர் நான்மணிமாலை மூலமும் உரையும் ... | 12 | 0 |
| குமரேச சதகம் உரை ... | 1 ரூ | | திருவாரூர் நான்மணிமாலை மூலமும் உரையும் ... | 8 | 0 |
| த்திருடிவெண்பா உரை | 1 ரூபா | | உவமான சங்கிரகம் உரை | 4 | 0 |
| பிரகலாத சரித்திரம் ... | 4 | 0 | சதாசிவரூபம் உரை ... | 4 | 0 |
| திருவள்ளுவர் சரித்திரம் | 3 | 0 | சௌந்தரியலகரி உரை... | 6 | 0 |
| சமயக்குரவர்நால்வர்சரித்ரம் | 3 | 0 | ஸ்ரீ கந்தரநுபூதி உரை ... | 8 | 0 |
| சாவித்திரி சரித்திரம் ... | 1 | 0 | கந்தரலங்காரம் உரை ... | 5 | 0 |
| மனமோகனராஜன் சரித்ர | 1 | 6 | கந்தரந்தாதி உரை ... | 5 | 0 |
| புருஷத்வேஷபூதகி சரித் | 1 | 6 | கந்தர் சஷ்டி கவசம் உரை | 5 | 0 |
| கடன்பட்ட கந்தன் சரித் | 1 | 0 | ஸ்ரீ விநாயக கவசம் உரை | 5 | 0 |
| அவிவேக பூரணகுரு கதை | 1 | 6 | கல்வளையந்தாதி உரை ... | 5 | 0 |
| பச்சையப்பமுதலியார்சரி | 10 | 0 | மறைசையந்தாதி உரை... | 5 | 0 |
| சங்கீத சாஸ்திர சரித்திரம் | 4 | 0 | சரஸ்வதியந்தாதி உரை... | 5 | 0 |
| சிதம்பர ரகஸ்யம் ... | 1 | 0 | கபிலாகவல் உரை ... | 3 | 0 |
| கஜேந்திர மோக்ஷம் ... | 2 | 0 | வீரசைவ வினாவிடை ... | 5 | 0 |
| இனிது நாற்பது உரை... | 3 | 0 | சைவ சமய விளக்க வினாவிடை, ஆசௌச வினாவிடை | 8 | 0 |
| இன்னா நாற்பது உரை... | 3 | 0 | பிரச்னோத்தரரத்நமாலிகை | 2 | 0 |
| களவழி நாற்பது உரை... | 3 | 0 | பர்த்ருஹரிவைராக்யசதகம் | 3 | 0 |
| கார் நாற்பது உரை ... | 3 | 0 | உபநயனார்த்த தீபிகை ... | 0 | 6 |
| சிறுபஞ்சமூலம் உரை ... | 12 | 0 | பட்டணத்தார் பாடல் ... | 2 | 0 |
| நான்மணிக்கடிகை உரை | 8 | 0 | பத்திரகிரியார் புலம்பல் | 1 | 6 |
| முதுமொழிக்காஞ்சி உரை | 5 | 0 | சிவராத்திரி மான்மியம் | 5 | 0 |
| ஏலாதி உரை ... | 6 | 0 | தாலாட்டுப் பிரபந்தம் ... | 4 | 0 |
| திரிகடுகம் உரை ... | 6 | 0 | ஸ்தலயாத்திரைபொதுவிதி | 6 | 0 |
| வியாதி மூலம் ... | 0 | 6 | பரமானந்த தீபம் ... | 2 | 0 |
| பணவிடு தூது ... | 2 | 0 | புஷ்பவிதி, புஷ்பபலன் | 3 | 0 |
| டிஸ்கவுண்டு மாலை ... | 1 | 6 | | | |
| காங்கிரஸ் மகாசபை ... | 4 | 0 | | | |
| ஔவைகுறள் ... | 2 | 0 | | | |

உ

# ஸ்ரீ பர்த்ருஹரியின் சரித்திரச்சுருக்கம்.

இந்நூலாசிரியராம் பிரஹ்மநிஷ்டராகிய பர்த்ருஹரி யென்பவர் மஹாநுபாவர், ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாதாசாரிய ஸ்வாமிகளின் குருமூர்த்தியாகிய ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாசாரிய ஸ்வாமிகளின் புத்திரரென்று அநேக கிரந்தங்களிற் காணப்படுகின்றனர். ஒருகாலத்தில் ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாசாரிய ஸ்வாமிகள் வித்தைகற்கும் விருப்பங்கொண்டு பூப்பிரதக்ஷிணமாக யாத்திரை செய்து வந்து ஒரு விருக்ஷத்தடியிற் சற்று நேரந் தங்கியிருந்தனர். அவ்விருக்ஷத்தின் மேல்பாகத்தில் ஒரு பிரஹ்மராக்ஷஸன் சாபவசத்தால் அநேககாலம் வசித்திருந்தது. தெய்வகதியால் இவருக்குச் சந்திப்பு நேர்ந்தவுடன் பிரஹ்மராக்ஷஸ் கீழிறங்கி வந்து "முற்பிறப்பி லொரு பிராமணனா யிருந்து அநேக வித்தைகளைக் கற்றிருந்த யான் அவைகளை அந்நியருக்கு உபதேசிக்காத தோஷவசத்தால் இப்பிரஹ்மராக்ஷஸ னாகிய ஜென்மமடைந்தனன். இனி அவைகளை யுனக்குபதேசித்துவிட்டு இச்சன்மசாபத்தை யடையவேண்டுமென்று நினைக்கின்றனன்" என்றது. அதைக் கேட்டவுடன் ஸ்வாமிகள் சந்தோஷமடைந்து "தேடிப்போன தெய்வம் குறுக்கே வந்தது" என்னும் பழமொழிப்படி "விரைந்தது முடிந்தது" எனக் கருதி அவ்வித்தைகளைக் கற்கத்தொடங்கினர்.

ஆறுமாதத்திற்குள் சகல வித்தைகளையும் ஆகார நித்திரைக ளின்றி மிகுந்த சிரமத்தோடுகூடிக் கற்றார். அவ்வாறுமாச காலமுஞ் சென்றவுடன் பிரஹ்மராக்ஷஸ் தன் சரீரத்தை விட்டு விதேக கைவல்யத்தை யடைந்தது. ஸ்வாமிகளனுக்கிரகம் பெற்றுக்கொண்டு வரும் வழியில் ஒரு தாசியின் கிருகத்தின் வெ

ளித்திண்ணையில் விஸ்ராந்திக்காகச் சயனித்திருந்தனர். ஆறு மாதகாலமாய்த் தாமெடுத்துக்கொண்ட சிரமத்தால் நித்திரை செய்யவும், ஆறுமாதபரியந்தம் ஒரே நித்திரையாக இருந்து விட்டனர். அந்தத் தாசி வந்து பார்த்து பயந்து வைத்தியர் பாற் காண்பிக்க "இது நித்திராதோஷம், இது தெளிய ஆறு மாதஞ் செல்லும், அதுவரை அன்னசாரமிட்டு இரக்ஷிக்க வேண்டும்" என்றார். அதுமுதல் அத்தாசியின் மகளாய ஒரு யுவதி சுவாமிகளின் தேகரக்ஷணத்தின்பொருட்டு அன்னத்தைக் கரைத்துத் தேகத்தில் பூசுதல் முதலிய பணிவிடைகளைச் செய்துகொண்டு வந்தாள். அவ்விதம் ஆறுமாதஞ் சென்றபின் சுவாமிகள் நித்திரை கலைந்தவுடன் மிகுந்த உபசாரத்தால் மயக்கந் தெளிந்து, மிகுந்த வணக்கத்துடன் எதிர்நின்ற அச்சிறுமியை நோக்கி, "பெண்ணே! நான் இவ்விடம் வந்திருந்ததன் பின் நடந்ததென்ன?" என வினவ, "சுவாமி! தாங்களிவ்விடம் வந்து இன்று ஆறுமாதமாயது; இதுவரை நித்திரையி லிருந்தீர்கள். இவ்வாறுமாசபரியந்தமும் யான் தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண்டிருந்தேன்" என்று அச்சிறுமி கூறினாள். உடனே சுவாமிகள் மிகுந்த சந்தோஷத்துடன் "பெண்ணே! உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். "சுவாமி! யுவதிகளுக்குப் புருஷபாக்கியமே சிறந்த பாக்கியமாதலால் தாங்கள் என் வரனாயிருக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தனள். உடனே சுவாமிகள், "ஹா! ஹா!! நான் பிராமணனா யிருக்கின்றேன்; இவளோ சூத்ர ஸ்திரீயா யிருக்கின்றனள். ஆகையால் விவாகஞ் செய்தல் எங்ஙனங் கூடும்? நான் இவளுடைய இஷ்டத்தை நிறைவேற்றுவதெங்ஙனம்?" என்றிவ்வாறு சற்றுநேரஞ் சிந்தித்து,

ஸ்மிருதியில் "பிராஹ்மணனானவன் பிராஹ்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னும் நான்கு வர்ணங்களினின்று நான்கு ஸ்திரீகளை ஏககாலத்தில் விவாகஞ் செய்யலாம்" என்று கூறியிருக்கும் விதியை நோக்கிச் சமாதானப்பட்டு உடனே அந்நகரத்திலுள்ள அரசன் மந்திரியாகிய ஒரு பிராமணரது புத்திரியையும், அந்நகரத்தரசனது குமாரியையும், ஒரு உயர்ந்த வைசிய புத்திரியையும், தாசியாகிய முற்கூறிய சூத்திர ஸ்திரீயையும் ஏககாலத்தில் விவாகஞ் செய்து அவ்வரசனது அரண்மனையில் வசித்திருந்தனர். சில வருடங்கள் சென்றபின் அப்பிராமண புத்திரியினின்றும் **வரருசி** யென்றொரு புத்திரனும், க்ஷத்திரிய குமாரியினின்றும் **விக்ரமாதித்தன்** என்றொரு புத்திரனும், வைசிய ஸ்திரியினின்றும் **பட்டி** யென்றொரு புத்திரனும், சூத்திர ஸ்திரீயினின்றும் பர்த்ருஹரி யென்றொரு புத்திரனும் உற்பத்தியாயினர். புத்திரர்களோடு சிலகாலமிருந்து பின்னர் காட்டிக்குத் தபசு செய்வதற்காகச் சுவாமிகள் சென்றனர். அதிபால்யத்திலேயே அம்மூத்த புத்திரனாகிய வரருசியும் தபசு செய்யும்பொருட்டுக் காட்டிக்குச் சென்றார். இவர் ஒரு கிரந்தஞ் செய்துளார். அதற்கு ஸ்ரீ சங்கர பூஜ்யபகவத்பாத ஆசாரிய சுவாமிகள் பாஷ்யஞ் செய்திருக்கின்றனர். சில வருடஞ்சென்றபின் **விக்ரமாதித்தனும், பட்டியும்** தபஞ்செய்து யாவையும் பெறக் காட்டிக்குச் செல்லத் துணிந்து தங்கள் சகோதரனாகிய **பர்த்ருஹரியினிடம்** ராஜ்யத்தை யொப்புவித்துக் காட்டிக்குச் சென்றனர். இங்ஙனம் பர்த்ருஹரி ராஜ்யபரிபாலனஞ் செய்துவருங்கால் ஒரு தினத்தில் ஒரு முனிவர் பர்த்ருஹரியைப் பார்க்க வருங்கால் ஒரு மாம்பழத்தைக் கொண்டுவந்து கொடுத்து இவ்வண்ணஞ் சொன்னார்: "ஓ

மஹாராஜனே! இப்பழம்போன்று யாண்டுங் கிடைத்தலரிது, இப்பழத்தைப் புசித்தாற் கிழப்பருவமுறாது எழிலாய தருணப்பருவத்துடன் சிரஞ்சீவியாய் வாழலாம். ஆதலால், இப்பழத்தைத் தாங்கள் புசியுங்கள்" எனக் கூறி, அம்முனிவர் தமது ஆச்சிரமத்திற்குச் சென்றார். அரசன் அப்பழத்தை வாங்கி "நாம் இப்பழத்தைப் புசிப்பதைவிட நமது பட்டஸ்திரீ புசிப்பாளேயாயின் அவள் அழகிய யுவதியாகவே யெப்போது மிருப்பள், நமது மரணபரியந்தம் யௌவன ஸ்திரீயோடு கூடவிருந்து சுகத்தை யனுபவிக்கலாம். நாம் இப் பழத்தைப் புசித்தால் நமது பட்டஸ்திரீ இறக்குங்காலையில் நாம் யாரோடிருந்து சுகத்தை யனுபவிப்போம். ஆதலால் நமது பட்டஸ்திரீ புசிப்பதே உசிதம்" என நினைத்து அப்பழத்தைத் தன் மனைவிக்காக அர்ப்பணஞ் செய்தார். மனைவி, அப்பழத்தை வாங்கி "இப்பழத்தை நாம் புசிப்பதைவிட நமது சோர புருஷனாகிய சாரதிக்குக் கொடுப்போம்" என்று தனது சோர நாயகனாகிய குதிரைக்காரனுக்குக் கொடுத்தாள். அவன் அப்பழத்தை வாங்கி "நாம் இப்பழத்தைப் புசிப்பதைவிட நமது சோரநாயகிக்குக் கொடுப்போம்" என்று அவ்வரண்மனை கூட்டும் ஒரு வேலைக்காரிக்குக் கொடுத்தான். அவள் அப்பழத்தை வாங்கி அப்பழத்தின் மகிமை தெரியாமல், "இப்பழத்தை நமது குழந்தைகளுக்குக் கொடுப்போம்" என்று நினைத்து அப்பழத்தைத் தன் குப்பைக் கூடையின்பேரில் வைத்துக் கொண்டு போகுங்கால் அரசன் மாளிகையினின்று பார்த்து, "இப்பழம் நமக்கு முனிவர் கொடுத்த பழம்போன்றிருக்கின்றதே" என்று நினைத்து அவ்வேலைக்காரியைக் கூப்பிட்டு "இப்பழம் ஏது?" என்று விசாரித்தார், அவள் "இப்பழத்தை

எனக்குக் குதிரைக்காரன் கொடுத்தான்" என்றாள். உடனே குதிரைக்காரனைக் கூப்பிட்டு, "அடா! இப்பழம் உனக்கு யார் கொடுத்தது?" எனக் கேட்டார். உடனே அவன் மிகுந்த பயத்துடன், "ஸ்வாமி! தங்கள் மனைவி யெனக்குக் கொடுத்தாள்" என்றான். உடனே அரசன் மிகுந்த கோபத்துடன் தன் மனைவியை யழைத்து விசாரித்ததில் யதார்த்தமாக நடந்த காரியம் முழுமையுந் தெரிந்து, "ஹா! ஹா!! நாம் இப்பேர்ப்பட்ட துஷ்ட ஸ்திரீயோடு சகவாசஞ் செய்யலாமா? இவளை நாம் இப்போது கொன்று, இனி யொரு ஸ்திரீயை விவாகஞ் செய்யலாமென்றாலோ, அவளும் இவ்வித குண முடையவளா யிருந்தால் எப்படி நம்புகிறது? ஆதலால் இன்றுமுதல் யாதொரு விஷய இன்பத்தையும் விரும்பேன்" என்று இவ்வாறு சிந்தித்து அப்பழத்தைத் தானே புசித்துத் தனது கிரகக் கிராம க்ஷேத்திர தனதான்யாதி சகல சம்பத்துக் களையும் இராஜ்யத்தையும் விட்டு அன்றே காட்டுக்குச் சென்று தபசு செய்யத்தொடங்கினார். இங்ஙனம் காய்கனிகள் பத்திரங் கள் இவைகளைப் புசித்துக்கொண்டு குகைகள், ஆரண்யங்கள், மணல்மேடுகள், நதிதீரங்கள் முதலிய இடங்களிற் சஞ்சரித் துக்கொண்டிருக்குங்கால், ஒரு நகரத்தினருகிலுள்ள ஒரு குப் பைமேட்டிற் சுவாமிகள் யோக நித்திரையி லிருந்தார். அந் நகரத் தாசனானவன் மிகுந்த தருமசிந்தனையுடையவனாதலால், நான்கு தூதர்களைக் கூப்பிட்டு, "யாரேனும் பிக்ஷுக்களிருந் தால் அழைத்து வாருங்கள்; வந்தால் அவர்கள் அபேக்ஷித் ததைக் கொடுக்கிறேன்; கொண்டு வருபவர்கட்கும் வேண்டிய சன்மானங்களைச் செய்கிறேன்" எனக் கட்டளையிட்டு நான்கு திசைகளுக்கு மனுப்பியிருந்தனன். அங்ஙனமே அத்தூதர்

கள் சஞ்சரித்து வருங்கால், முற்கூறிய குப்பை மேட்டில் சுவாமிகள் சயனித்திருப்பதைப் பார்த்து "ஓ பிக்ஷுவே! நீ எங்கள் அரசன் அரண்மனைக்கு வந்தால் இன்றே யுனது தரித்திரம் நீங்கிவிடும். ஆதலால் நீ சற்றுந் தாமதம் பண்ணுமல் என்னொடு கூடவா" என்று அத்தூதர்களிலொருவன் அழைத்தான். அதற்குச் சுவாமிகளொன்றும் பேசாமல் மௌனமாய் நிஷ்டையிலிருந்துவிட்டார். உடனே சுவாமிகள் இங்ஙனமிருப்பதைத் தூதன் பார்த்து, "நம்மரசனிடம் போய்ச் சொன்னால் நமக்கு ஏதேனும் சன்மானஞ் செய்வார்" என அதிசீக்கிரத்தில் அரண்மனைக்குச் சென்று அரசனுக்குத் தெரிவித்தான். உடனே அவ்வரசன் சர்வவைபவங்களுடன் யானையேறி சுவாமிகளிருக்குங் குப்பைமேட்டை யடைந்து யானைவிட்டிறங்கி, "ஓ பிக்ஷுவே! உனக்கு என்ன வேண்டுமோ அதைக் கேட்டால் நான் இக்கணத்திலேயே கொடுக்கின்றேன்; எனது இராச்சியத்தைக் கேட்டாலும் கொடுக்கின்றேன்; இக்கிரீடத்தையுஞ் சூட்டுகின்றேன், சற்று வாய்திறந்து வேண்டியதைக் கேட்கவேண்டும்" என்றான். உடனே சுவாமிகள் புன்னகையோடு "ஓ அரசனே! நான் இராச்சியம், சதுரங்க சேனை, கிரீடமுதலிய யாவையுங் கொடுத்துத்தான் இக்கந்தையையும் கௌபீனத்தையும் வாங்கித் தரித்திருக்கிறேன். ஆதலால் எனக்கு உன் செல்வம் யாதொன்றும் வேண்டுவதில்லை" என்றார். உடனே அரசன் மிகுந்த பயத்தோடுகூட "ஹா! ஹா!! நமது சக்ரவர்த்தியாகிய பர்த்ருஹரியன்றோ இவர்? நாம் தெரியாமல் அபசாரம் பண்ணிவிட்டோமே" என்று சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்து, "சுவாமி! அடியேன் அறியாமற் செய்த அபசாரத்தைப் பொறுத்தருள

வேண்டும்" என்று பிரார்த்தித்தான். உடனே சுவாமிகள் சந்தோஷ பூரிதராய் "ஓ அரசனே! நீ யாதொரு அபசாரமுஞ் செய்யவில்லையே, இப்படி தருமத்தைப் பரிபாலிப்பவனாகிய உன்னிடத்தில் யான் மிகச் சந்தோஷ முடையவனா யிருக்கின்றேன்" என, அவ்வரசனுக்கு அனுக்கிரகம் புரிந்து, அவ்விடம் விட்டெழுந்து காட்டுக்குச் சென்று நிஷ்டை செய்து கொண்டிருந்தார். இங்ஙனஞ் சிலகாலங் காட்டி லிருக்கும் போது, பரமேசுவரனும் பார்வதிதேவியுமாகக் கைலாசத்தி லிருந்து, விமானமேறிச் செல்லுங்கால், கருணாமூர்த்தமாகிய பார்வதிதேவி சுவாமிகள் (பர்த்ருஹரி) தபசு செய்வதைப் பார்த்து மனமிரங்கி, ஈசுவரனிடம் இவ்வண்ணஞ் சொல்லலுற்றாள்: "சுவாமி! பர்த்ருஹரி மஹா தபசு செய்கின்றனே! மகா சிவபக்தனாயிற்றே! மிகத் தரித்திர அவஸ்தையோடு கூடியிருக்கின்றனே! ஏதாவது கொடுக்கக்கூடாதா!" என்றனள். அதைக்கேட்டு "தேவீ! அவன் நித்திய திருப்தனாயிருத்தலின், ஒன்றும் அபேக்ஷிக்கமாட்டான்" எனப் பரமசிவன் அருளிச் செய்தார். உடனே, அம்பிகை, "சுவாமீ! இதென்ன அதிசயம், கொடுத்தால் யார்தான் வேண்டா மென்பார்கள்? கொடுத்தற்குச் சம்மத மில்லாவிடின் அவனை நித்திய திருப்தனெனச் சொல்லவேண்டுமா?" என்றாள். பர்த்ருஹரியின் வைராக்கியத்தைப் பார்வதிதேவிக்குத் தெரிவிக்கவேண்டுமென்று சுவாமி திருவுளத்தெண்ணி, அம்பிகையுடன் விமானத்திலேறி பர்த்ருஹரியின் எதிரில்வந்து காட்சி கொடுத்தார். உடனே பர்த்ருஹரி பார்த்து அதி சீக்கிரத்தி லெழுந்து நமஸ்கரித்து நின்று தோத்திரஞ் செய்தார். உடனே பரமசிவன் மிகுந்த கருணையோடு "ஓ எனதன்பனே! உனக்கு யாதுவரம் வேண்

டும்” என்றருளிச்செய்தார். அதற்கு “சுவாமீ! நின்றிருவருளால் யான் நித்திய திருப்தனு யிருத்தலின், நின் அநுக்கிரகமன்றி மற்றொன்றும் வேண்டுவதில்லை” என்றார். உடனே சுவாமி மீண்டும் “நான் வந்ததற்காக யாதேனும் ஓர் வரத்தைக் கேள்” என்றார். அதற்கு “சுவாமீ! நான் நிஷ்டையிலிருந்து மூன்று தினத்திற் கொருமுறை யெழுந்திருந்தாற் சிறிதுமாக் கிடைக்கின்றது. அது ஏழுதினத்திற் கொருமுறை கிடைக்கும்படி செய்யவேண்டும்” என்றார். உடனே பரமேசுரன் ஓமென்றங்கீகரித்தருளினார். அப்போது ஸ்ரீ பார்வதிதேவியார் மிகவும் வெட்கத்தோடுகூட “ஹாஹா! இப்பேர்ப்பட்ட வைராக்கிய புருஷர்களும் பூலோகத்தி லிருக்கின்றார்களா?” என்று மிகவும் ஆச்சரியப்பட்டு, அவ்விடத்திருந்து புறப்பட்டு (சுவாமியும் அம்பிகையுமாக)க் கைலாசத்திற்குச் சென்றார்கள். இங்ஙனம் வைராக்கியத்திலும் ஞானத்திலும் பிரதமபுருஷனுகிய பர்த்ருஹரியானவர், நீதிசதகம், சிருங்காரசதகம், வைராக்கிய சதகம், வியாகரண மகாபாஷ்யகாரிகை முதலிய இன்னும் அநேக கிரந்தங்களை இயற்றியிருக்கின்றனர். இம் மஹானுபாவர் சிரஞ்சீவியாதலால் இப்போதும் ஸ்ரீ காசிக்ஷேத்திரத்தினின்றும் பன்னிரண்டு மயில் தூரத்திற்கப்பால் சூனார் என்னும் ஓர் கோட்டையின் குகையி லிருப்பதாகவும், சிறிது காலத்திற்குமுன் பன்னிரண்டு வருடங் காத்திருந்த ஒரு பிராமணருக்கு வரமருளியதாகவும் வதந்தி. சுபம்.

## ஸ்ரீ பர்த்ருஹரியின் சரித்திரச் சுருக்கம்

## முற்றிற்று.

---





ஸ்ரீமஹாகணேசாயநம:

சிவமயம்.

# ஸ்ரீ பர்த்ருஹரி வைராக்கிய சதகம்.

## பாயிரம்.

வன்னிநாயகன் குகன்சிலை யனைச்சடை விழுவார்
சென்னிநாயகன் செகத்குரு சிவசுருதி யிராம
வின்னிறையக னருணைவெற் பருணகிரி வீர
வென்னிறையக னிவர்பத மிறைஞ்சியேத் தெடுப்பாம்.

ஞானமதடைய வொப்பறு காரண நற்றுற வன்றியே றிலையென், றுனபொன் மனைக வனைத்தையுந் துறந்தே யரன்பர மாகிய வழியின், மோனநன் னிலையை யடைவுற யானு முன்னவன் முளரியைத் தொழுதே, தேனவ னருள்வை ராகநூ றதனைத் தெளிவுறத் தமிழினாற் றெரிப் பேன்.

## நூல்.

### 1 - திருஷ்ணையின் றூஷணம்.

**ஒருசிகை யணியாங் கவின்மதிக் கலையி னொளிவிடுஞ் சிகையொளி யுடையோன், வெருசலச் சலப மதற்பொடி யாட்டால் விளைத்துயர் தசைமுனைய விர்வோன், கருவுளி லிலங்குங் கனாயறு மோகக் கடுமிருள் வலிதொலைத் துணர்**

வாந், திருவிளக் கரன்போ கியருள விலத்தே திகழுவ னவனை யே பணிவாம்.

(**பொழிப்புரை.**) சிரோபூடணமா யொளிவிடுஞ் சசிகலையைத் தரித்தொளிர்பவரும், விளையாட்டான் மன்மதனைத் தகித்தவரும், சிரேயசுதசையின் அக்ரபாகத்திற் பிரகாசிப்பவரும் ஞானதீபமுமாய அரன். உட்கிளம்பு மபாரமோக திமிரக்கொடுமையைக் கெடுத்து யோகியரின் உள்ள விலலத்தே விஜயம்புரிவான் அவன் திருவடித்தா மரையைப் பணிவாம். (1)

அளவறு கொடிய விடமமா மிடங்க ளலைந்தனை யடைபயன் சிறிதோ, வுளகுலஞ் சாதி மானமுமொழித் தேயுழன்றனை பயன்பெறாச் சேவை, வளவினுட் பிறர்தம் வெட்கிலதாயின்றாய் வாயச மெனவுமேலா பத்தால், ளௌர லென் பாவ கருமகு சகைசயே வாஞ்சையே மகிழ்வுறு யின்றாம்.

(**போ - ரை.**) அளவற்ற கஷ்டதேசங்களிற் சுற்றினை, சாதி குலமொழித்துச் சேவித்தாய், காகமெனப் பிறர்மனை புகுந்துண்டனை யாதொரு பயனுமின்றி யின்னும் வளருகின்றனை ஏபாபகருமக்குறி யாய ஆசையே! நினக்கின்றுந் திருப்தியின்று? (2)

பூதல நிதியின் மதிகொடு போழ்ந்தேன் பூதரத் தாதுவைப் புகைத்தேன், மோதுமெண் டிரையைக் கடந்தன னரசை முயல்விறு னுவக்குமா முடித்தேன், சூதுறு மனுதுற் பூசையைப் பரனைச் சுடலையி னிசியினைத் துலைத்தேன், போதரல் கவடியெனக்கிலை விழைவே பொருட்பெறு சிந்தையாய்ப் பவிநீ.

லென், தனமதத் தம்பித மனமுடைத் தனிகரின்முன் னெக்காரணத் தான் மானமற்றயாம் நங்குணங்கூறும் பாதகத்தையுஞ் செய்தேம் தற்புகழ்ச்சியாய பாதகமென்க. (5)

பொறுமையிற் பொறுக்கே மிலத்தினை துசித புர்சுக பங்கிர் விளுற் போக்கேம், பொறுவினம் பொறுவாக் குளிர் வளியாழுர்சிப் பொங்கனுர் புகழ்தவம் புரிபேஞ், சிறுதன மிரவும் பகலும்பெ நினைந்தேஞ் சிவன்பத மில்லுயிர் செயித்தே, வழிதவ்வப் பயனுன் வஞ்சியா முனிவர் வினைதரு கருமமே வினைந்தேம்.

(பொ - ரை.) பொறுமையினுற் பொறுத்திலேம், இரக சுகத்தைத்தோட திருட்டியினுல் விடுத்திலேம். சகிக்கவொணுத ஆதபத்துயரைப் பொறுத்தேயன்றித் தவம்புரிந்திலேம். தனத்தியானஞ் செய்தனமேயன்றிப் பிராணனையடக்கிச் சிவத்தியானம் செய்திலேம். அவ்வப்பயனின்றி முனிவர்செய்கையே செய்தோம். முனிவர்க்கும் நமக்குஞ் செய்கையுந் துயரும் சமமாயும் யாமொழுங்கிற் செல்லாததாற் பயனின்றியவாறு காண்க. (6)

போகம்போ புக்தமின்றும் புக்தமேமாயாமே யானேந்
தாகமாய்த் தபித்தாம்யாமே தபமதோ தப்தமின்று
மேகமோ காலமின்று மேகுவம் யாமேயாசை
யாகுதல் சிதிலமின்று மாயினுஞ் சிதிலமியாமே.

(பொ-ரை.) போகங்களைப் புசித்திலேம், யாமேயவற்றி னடைவின் சிந்தையாற் பீடிக்கலுற்றேம், தாபத்திரயத்தாற் றபிப்புற்றேமன்றித் தவம்புரிந்திலம், காலமோ செல்வதின்றும் யாமேசெல்வோம், திருஷ்ணை சிதைந்திலை யாமேசிதைந்தனம். (7)

### வே று.

வலிகள்வளை வுற்றன வாண்முகத்தைப்
பலிதந்தனி றுற்றலை பாற்சினமா
மெலிவுற்றன கைபத மேனியெலாம்
வலிதெவ்வன முற்றது வாஞ்சையரோ.

(பொ - ரை.) வதனத்தைத்தோற்'சுருக்குகளாற் காணலுறும் ரேகை யென்னும் வலிகளோ மூடிவிட்டன, வெண்மையாற் சிரம் வெண்குறிப்புற்றது, எல்லா அவயவங்களுந் தளர்ந்தன, ஆயினும் திருஷ்ணையென்னும் ஆசையானது இப்போது தாருண்யத்தை படைத்திருக்கின்றது. (8)

### வே று.

போகநசை பொன்றியதாற் புருடபகு மானமுமே
பொன்றிப்போன, கேதகினர்முற் பரலோக முயிர்நிகர்த்த
மானமுள்ள வினியராறே, ராகமெலத் தண்டெழுச்சி கண
திமிர மறைப்புறவே யரியநோக்க, மூகமுறா மாகமநோ
வென்றாலும் பயமுறுஞ்சா மோசிப்பானே.

(பொ - ரை.) போகம் புசிப்பானுற்ற வின்மையின் போகநசை நசித்தது, புருடபகுமானத்தன்மையும் போயது, தன்னுயிர் நிகர்த்த மேன்மையான உறவினரும் பரலோகஞ் சேர்ந்தார், தண்டெழுச்சியாய்க் கண்டெரியவில்லை, என்றாலும் சரீரம் மரணமடைவானஞ்சுகின்றது. (9)

எண்ணநீர் வேட்கை மலைபொலி ராக மிருங்கரா
விதர்க்கமார் விகங்கந்,' திண்ணிதைத் துருமநாசினி மோ
கத் திரிசுழற்கடற்பரி தறவாழ்ந், தொண்ணுயர் சிந்தைக்

கரையுறா வாசையொருநதிப் பாரமே யடைந்த; தண்ணிய விசுத்த சித்தமெய்த்தவர்க டடையறச் சுகநாக ருவரால்.

(பொ - ரை.) மனோரதநீரும். அடைவான் வேட்கையலையும், அபிமானன் துக்களில் சிநேகமாய இராகமுதலையும், இலாபாலாப சோக விர்க்கப்பறவையும் நிறைந்ததும் தைரியத்தருவைக் கெடுப்பதும் அஞ்ஞான விருத்திகளாய சுழல்களோடு கூடியதும், அதியுன்னத மாயசிந்தையாய கரைகளோடு கூடியதும் ஆய ஆசைநதியின் அக்கரையை விசுத்தமன யோகீசுரர் கடக்கின்றனர். மற்றைய ரிடர்ப் படுவரென்றறிக. (10)

1-வது திருஷ்ணையின் தூஷண முற்றும்.

---

## 2 - விடயபரித்யாக விடம்பனை.

பவத்தினிற் சரித்த சரிதையைச் சுபமாய்ப் பார்க்கிலை னறாப் பரிபாக, முவத்தலில் பயத்தைப் பாக்கிடு நிலைபெறு குறமகற் புண்ணியக் குவையா, வைத்தினி னெடிது கவர்மிகு போகமவையும்புன் விஷயிக டமக்கு, வனத்தை யே யியா திகமிக மிகவுமாமென லையமு மாமோ.

(பொ - ரை.) சமுசாரத்தி லனுட்டிக்க புண்ணியாசரணத்தை க்ஷேமகரமாய்க் கண்டிலன், புண்ணியங்களின் பயனை யெண்ணு மெனக் கச்சத்தை யுண்டுபண்ணுகின்றது, எனெனின்? மகத்தாய புண்ணியக் கூட்டத்தால் வெகுகாலந் தொடங்கிச் சம்பாதித்த விஷயங்கள் விஷயிகட்கு மகத்தாய வியசனமே கொடுப்பதற்காகின்றன.

புல்லிய விடயஞ் சிரதர மிருந்தும் போருத றிண்மைம்போ ருதலிற், புல்லிய பேத மென்னர ரிவர்றைப்

போக்கில ரென்னைகொல் சுயமே, யொல்லையிற் சுயமே
விடுமேன் மனக்கோ வுவமையி லிடர்ப்பொருட் டிவை
தாம், வெல்லுறப் படுமேல் விழைவுப சமத்தின் வீழ்வி
லாச் சுகம்விளைத் திடுமே.

(போ - ரை.) விடயங்கள் வெகுகாலமிருந்தும் அவசியம் செல்வனவேயாம். செல்லலிலென்ன பேதமிருக்கின்றது. எக்காரணத்தாற், ருமேயிவற்றைவிட் டொழிக்கிலர். சுயமேயிவை புருடனை விடுமேல் மனத்திற் கதிகதுயரை விளைவிக்கும், புருடனிவற்றைச் சுயமாய்விடுவனேல் உபசாந்திச் சுகத்தையடைவனென்க. (12)

பெரும்பிரம ஞானவிவே கத்தானே நிமலப் பெரு
மதியரியற்றவுரு தியற்றுவராற் புதமே, யரும்போக வநு
பவத்தே யாயதனங் களையு பாசையற வெதனனே யற
விடுவர் யாமோ, விரும்பியடைந் திலமுனமு மின்னுரிய
மிலதாய் வேண்டுமினி மேலும்விசு வாசமுறாற் கலவாந்,
திரும்பிநகை யதனனே பரிக்கிரகந் தமையுந் தீர்த்துவிட
வத்தியந்தஞ் சத்தியது மிலமே.

(போ - ரை.) பிரஹ்மஞானத்தாலுளதாய விவேகநிர்மல புத்தியர்கள்செய்ய முடியாததையுஞ் செய்வர். எதனாலனுபவிப்பான் எதிர்ப்போந்த தனங்களையு மத்தியந்தமாசையற விட்டொழிப்பமோ, முன்னங் கிட்டிலதா யிப்போது மடையப்பெறாததா யினிமேலுமடைவான் றிடவிசுவாசமற்றதாய் மனோரதமாத்திரத்தாற் சம்பாதித்த தாயதனங்களையும் விடுவான் அத்தியந்தம் வல்லமையற்றுளே மியாமென்றறிக. (13)

மலையுறு குகைக்கண் வசித்துய ரொளியை மனந்
தனி னினைந்ததன் னியரின், பொலிவுறு சுகக்கட் புனற்

கண மடிமேற் புட்குல மேமற மாந்து, மலமுறு மனன மாளிகை வாபிமலர்த்தட மாடல்காக் களினூ, டலைவதி னினிமை யழுந்துறு நமக்கோ வாயுளே யறவழிந் திடு மால்.

(பொ - ரை.) பர்வதக்குகைக்கண் வசித்து பரஞ்சோதியாய பிரமத்தை சதாமனத்திற் றியானிக்குந் தன்னியரின் ஆனந்தக்கண்ணீர்த் துளிகளைப் பயமற்று மடிமேலிருந்து பறவைகள் பானஞ் செய்யும்; மனோரதமேல் வீடுவாவிதடாகி ரீடாகானனங்களில் விளையாடுந் தற்பரராய நமக்கோ ஆயுளத்தியந்தம் நஷ்டமாகின்றது. (14)

வேறு.

அசனம் பயிக்குஞ் சுவையிலதா மதுவு மேக வாரமதாம்
விசன தலமே யணையாகும் வேலையாட்க டனதுடலே
வசனஞ் சிதில சதசகல மயமாங் கந்தை யாமெனினும்
விசன விடய மம்மவம்ம வீடவிலதீ தென்னைகொலோ.

(பொ - ரை.) புசிப்பது பிக்ஷான்னம் அதுவும் சுவையற்றதாயொருவேளை, படுக்கை தரையாம், வேலையாட்கள் தன்னுடலவயவங்களாம். வஸ்திரமோ கிழிந்த நூறுகண்ட மயமாயகந்தையாம், ஆ! ஆ!! அங்ஙனமேனும் போகவாஞ்சை விடுபடுவதின்றாம். (15)

குயமோ பிசித பிண்டமதாங் கூழின்கும்ப நிகர்க்குமெனு, வயர்வாம் வதனஞ் சிலேற்பனவில் லதுவு மதியின் றுலியமெனுக், கபமே பெருகி நணதுளையைக் கரிநற் சிரமே கடுக்குமெனு, வியலா விகழும் வடிவமதை வியனற் கவிகள் விதந்துரைத்தார்.

(பொ - ரை.) தனமோமாம்ச முடிச்சாம், கனககலசமெனவு வமிக்கப்பெற்றது, முகமோ சிலேட்டுமக் கிரகமாம், அதுவும் சசாங்கனோடு வமிக்கப்பெற்றது. மூத்திரத் தானனேவுற்ற ஸ்தானத்தை யானை மத்தகத்தோடொப்பிடப் பெற்றது, சதாநிந்திக்கத்தக்க வடிவினைப் புலவர் விசேடங்கள் புகழ்ந்துளாரென்றுணர்க. (16)

காமிய ருடல் வுமைக்கரை யுடலீ கண்ணுதலேகனே கதிர்வோன், காமிய ரலரு டொழித்தபெண் ணுறவர் கருதெவன் றன்னின்வே றிலரால், காமன தழிவி லம்பராக் கடுவைக் கதுவிய வேனையர் கழிப்பான், காமனுற் கோடும் விடயங்க ளயில்வான் கடுந்திறன் மருவுற லிலரே.

(பொ - ரை.) காமியருக்குட் பார்வதிதேவிக்குப் பாதிதேகமீந்த பாமனே யுயர்ந்தவன், விரக்தருளவனே நோக்கப் பெண்ணுறவொழித்தாருமின்றாம். நீக்கமுடியாத மானம்பாம் பாம்பின்விடம் வியாபிக்கலுற்ற மூடஜனங்களாய மற்றையர், மன்மதனுலளித்த விடயங்களைப் போகிப்பானேனுந் தியாகிப்பானேனுஞ் சமர்த்தான்றாம்.

வெம்மையை யுணரா தொருபெரும் விளக்கில் விட்டில்வீ ழுகதவக்கயலு, மம்மயில் வுறாக முட்பெறு பிசிதமறிவிலா மையி னறிந்தேயு, மெம்மனோ ரெவரு மிவணைர்க் குழுவே யிமையந்துறாங் காமமா மிவற்றை, யம்மவோ வீட லிலமயன் மகிமை யாழ்ந்ததே யாமதிசயமே.

(பொ - ரை.) சுடுந்தன்மையை யறியாமற் சலபமானது தீவிரதகனத்தில் வீழ்ந்தொழிக, அம்மீனமும் அறியாமற் றூண்டிலிவிட்ட மாம்சத்தை யருந்துக, யாம் அறிந்தும் ஈண்டு அளவில் ஆபத்துக்க ணிறைந்த விஷயங்களை அந்தோ விடுகிலம் மோகமகிமைமிகவு மாழ்ந்ததன்றோ. (18)

தாகமதால் வாய்காயிற் சீதமது ரச்சலத்தைத் தணிப்பு மாந்தும், ஆகுபசி யுறிற்புலா லாதிகலி தச்சாலி யனமே யுண்ணுந், தாகமதேற் காமனழற் றையலினைத் திடதர மாய்த் தழுவாநிற்கு, மேகுபிணி மாற்றையுல கின்பெ னவே பிறழ்ச்சிமதி யெய்துமாலோ.

**(பொ - ரை.)** தாகத்தானே முகங்காயிற் சீதமதுர நீரையருந் தும், பசித்திடின் மாம்சாதிசார்ந்த நெல்லன்னத்தை விழுங்கும், காமாக்கினி கொழுத்திடு அதிதிடமாய் மனைவியை யாலிங்கிக்கும், நோயின் மாற்றுயவிவற்றை யின்பெனச்சன மாறுபாடுற்ற தென்க.

உன்னத வீடொடு ணர்வினர் புகழு புயர்சுதர் சங் கையே யொழிந்து, மன்னிதி தயிதை மங்கலை யைதும் வளநவ மெனமதி யிழந்தோ, ருன்னியிவ் வுலகை யுளதெ னக் குடும்ப வொருகராக் கிரகமே புகுவர், தன்னிய ரோவவ் வகிலமுங் கணத்திற் றணருமென் றுணர்ந்தொ ழிப் பர்களால்.

**(பொ - ரை.)** உயர்ந்த மாளிகையென்றும் சற்புருடர் மெச்சும் புத்திரரென்றும், சங்கையிலடங்கா நிதியென்றும், கல்யாணி மனை வியென்றும் தன்வயது நவமென்றும் அஞ்ஞான மூடஜனங்கள் உல கை மெய்யெனக்கருதிச் சமுசார சிறைச்சாலையை யடையாநிற்பர்; அஃதெல்லாவற்றையும் கணபங் குரமெனக்கண்டு தன்னியரோ சந் நியசிப்பர். (20)

2-வது விஷயபரித்யாக விடம்பனை முற்றும்.



## 3 - வது யாஞ்சாதைன்ய தூடணம்.

தீனுதீ னத்தியைந்த முகமழுகை பசிநோய் செறித
ருஞ்சி றுர்களினுற் பற்றுறுசீ ரணமாம், மானுவம் பாரி
ரன்ன விடரை யுறுமனையாள் மலர்விழிப்பட் டிலளாகி
லிரப்பதெய்தாப் பங்கத், தானேவந் துறுபயத்தாற் றழு
தழுத்த களந்தா னுகவேவசகலமிசை யக்கரமு மழிந்தே,
தானேவந் தெரிந்தெழுந்த தன்சடரப் பொருட்டாய்ச்
சன்மான புருடனெவ னீயெனச் சொற்றிடுமோ.

(போ - ரை.) அழுகையம் பசியும் நிறைந்து தீனதீனமுகக் குழந்தைகளாற் பீடிக்கப்பெற்ற கிழிந்த ஆடையுடையவளும் கஞ்சியற்றவளுமாய மனைவி கண்ணுறுளேல் எந்தமானியாய புருடன் றன் றகிக்கும் வயிற்றின்பொருட்டு யாஞ்சாபங்கபயத்தாற் றழுதழுத்த கண்டத்திலுடைந்த குறைந்த அக்ஷரங்களோடு கொடுவென்று கேட்பன். (21)

வேறு.

அபிமதமிக மானமென் முடியினை யவிழ்ப்பதில் வலி
தாகி, தபுருருதர குணகண மரைகொளிர் தண்ணிறை
மதியாகி, விபுலமுற் றிலங் கிலச்சைவல் லிபையபறு வியன்
குடா ரிகையாகும், விபுசெயற்கருஞ் சடரவிப் பிடரியும்
விடம்பனஞ் செயுமாலோ.

(போ - ரை.) இஷ்டமாய மகாமானமாய முடிச்சைக் கெடுப்பதில் வல்லமையுள்ளதும், பெரும்பெரிய சற்குணக்கூட்டத் தாமரையின் கேட்டிற்குற்ற மிகுந்தொளிராநின்ற சந்திரிகையானதும், விஸ்தாரமாய் விளங்காநின்ற லஜ்ஜைக்கொடியறுக்கும் பாசுவானதும்

ஆயநிரப்ப வொண்ணா விவ்வயிற்றுக்குண்டாச் சட்டி யாசகானு கரணத்தைச் செய்கின்றது. (22)

நீதிகர்ப்ப விப்பிரரீ நெய்யையுணு மனமேலா னீடு
புகைத் தாமிரமார் புறம்பெறுபுண் ணியமா, வீதிநகர்
வனத்தேனும் வெண்படத்தான் மறைத்த வீறில்கபா லந்
தரித்து வாயிறொறும் புகுந்தே, தீதுதராக் குகைநிரப்பப்
பசியடைந்த மானிசெறிதரவே யுயிர்தனைச் செயன்மேலா
மன்றிக், கோதுறவே யனுதினமுந் தீனமுறல் சமமாங்
குலமதன்ற னனந்தலையிற் குணமுடையதன்றே.

(**போ - ரை.**) நீதிநிறைந்த மறையோர் வேள்வியனற் புகைத் தாமிரஞ்சார்ந்த நகரவனங்களில், வெள்ளைவத்திரத்தான் மறைத்த மலினவோடு தாங்கி வாயில்தோறும் புகுந்து வயிற்றுக்குகை நிரப்பப் பசியுறுமானி யுயிரைச்செயன்மேலா மல்லாமல் தினந்தினந் துல்லிய குலத்திற் சென்று தீனமுறல் நலமுடையதன்றாம். (23)

கங்கையின்றன் றரங்ககண சீகரத்தாற் சீதலத்தைக்
கலந்து காலுங், துங்கவித்தி யாதரரா லதிட்டிதமாஞ்
சிலாதலநற் றுங்கினன்றோ, மிங்கெவையும் பிரளயத்தை
யடைந்தன வென்னெதனாலே யிப்பாருள்ளோர், பங்க
முறு மானமுறும் பரபிண்ட ரமணர்களாய்ப் பதைக்கின்
றனரே.

(**போ - ரை.**) வித்தியாதரரால திட்டிக்கப்பெற்ற கங்கையின் கல்லோலத் துளிகளாற் சீதளமாய அழகிய சிலாதலங்களாய இமவான் றன்றானங்கள் பிரளயமடைந்தன வாவென்? எதனால் அவமான சஹித பரபிண்டரதர்கள் மனுடர்களாய் விட்டனரோ. (24)

கந்தரங் களினென் கந்தகொந் ததுவோ கார்வரை நீர்கரந் ததுவோ, வந்தரு மதுரக் கனிகள்வற் கலைக ளார்கிளை யென்கொலற் றதுவோ, முந்திரிப்பணிவு மில்கல ரனுரான் முற்றுறு சிறதன கருவ, வந்துவி னடனப் புருவமாங் கொடிவாய் வதனங்க ளெதனிலேக் குவரால்.

(பொ - ரை.) குகைகளினின்றும் கந்தமற்றனவா. வரையினின்று மருவிகளற்றனவா. தருக்களினின்றும் ரசசஹித பல நிறைந்ததும் வற்கலை நிறைந்ததுமாய சாகைகள் நாசமாயினவா. அத்தியந்தம் விநயசூனியராய துட்டரின். துன்பாற்பெற்ற சொற்பதன கருவுவன வயத்தானர்க் தனப்புருவலதைகளுற்ற முகங்களில் எக்காரணத்தால் விழிக்கின்றனரோ. (25)

புண்ணியமா மூலபலங் களினாலே பிரியம் பூரணமாம் விருத்தியினை யின்றுன்ற புரிமின், றன்னவமாங் கிருபணமில் பல்லவங்க டமிறைற் றரையணையையர் சமைமிநெழுமின் திருமின்வனஞ் சேனுமி, னெண்ணுசத தம்பொருளே யதனேனே பிறழ்ந்தே பிரும்விகல வாணியுறுஞ் சுத்திரரா முணர்வில், கண்ணரிய மூடமன விறைவர்களின் பெயருங் காதினுங் கேட்டிலமோ யாண்டுயிர்நேயர்களே.

(பொ - ரை.) புண்ணிய மூலபலங்களாற் பிரிய பூரண விருத்தியை யிக்காற் புரிமின், அழுக்கற்ற நவபல்லவங்களாற் பூசய்யை செய்ம்மின், எழுமின் வனஞ் சென்மின், யாண்டு சந்ததம் பொருளேயால் விபரீதமுற்று விகாரவாணியையுற்ற ஐஸ்வர்ய சம்பன்ன அவிவேகமூட மனச்சுத்திரர் பெயருங் கேட்கப்படாதோ ஆண்டெனக. (26)

தன்னசை வயமே தருக்களின் கனிக டடையற வனந்தொறுங் கிடைக்கு,மின்னற நதிகடமிற்குளிர் மதுர வெழிற்புன லிடந் தொறுங் கிடைக்கு, மின்னுசு லலித லதையிலை மயமா மிருதுவூ றாறுமணை யுறினுங், கின்ன வன் றனிகர் முன்றிலிற் றுயரைக் கிருபணர் பொறுத்துள ரெணையோ.

(போ - ரை.) இட்டப்படித் துன்பின்றி வனந்தோறும் தருக்களின் பலம் கிட்டும். இடந்தோறும் புண்ணிய நதிகளின் சீதள மதுரநீர் கிட்டும், சுலலிதலதாபல்லவமய மெல்லணை கிட்டும், அங்ஙனமேனும் தனிகரின் வாயிலின் கிருபணர் சந்தாபத்தைச் சகிக்கின்றனர். (27)

தனபதிமுன் னிரப்பதனாற் றுயர்சார்ந்து சரிப்பரெவர் தனங்க ளாதி, யினமடைப முடிவுபெ றடையமதி யின்சிறுமை யெய்வரெவர், மனுமவரின் றினங்கணிட்டை முடிந்திடமன் மலைக்குகையின் பாறை யான, வினியசய் யை மிசையிருந்துள் வெழும்புநகை தன்னினொடு மெண் ணற் பாற்றே.

(போ - ரை.) யாவர் தனவான் முன்னிரப்பாற் றுயருறுகின் றாரோ யாவர் போக சங்கிரக மாத்திர புந்தியரோ, அவர் தந்தினங் கள் நிட்டை முடிந்திட மலைக்குகையின் பாறையான சய்யையின் மீதிருந்து உட்கிளம்புநகைப்பொடு மெண்ணற் குரித்தாம். (28)

மகிழ்வினி னெவர் நிரந்தர முதிதர் மனுமவர்க் கபின் னமா முதித, மிகழ்தன லோப சங்குல வுளத்தரெவரவர்க் கிரிதரா திச்சை, புகன்முறை நிதிகட் டானமாய்த் தனி

னே பொருந்துபொற் புகழுறும் மேரு, புகழுய னெவர்க் காய்ப் புரிந்தனன் வாளா பொருத்தமின் றென்கருத் தினுக்கே.

(போ - ரை.) யாவர் சந்தோடத்தா லானந்தியரோ நிரந்தரமவர்க்கா னந்தம் பிறிவின்றும், மற்றியாவர் தனலோபசங் குலவுளத்தரோ அவர்க்காசையோயா, இம்முறை நிதிகட் கிடனாய்த் தன்பாலே சமாப்கஹேம மஹிமையுடைய அம்மேருகிரியை யாவர் பொருட்டுப் பி-மாசெய்தனரோ எனக்குப் புலப்படவில்லை. (29)

தயினியமின் னிரதிசய சுகமாயெவ் விதத்துந் தணர்ந்துபயந் துன்மதமா னமற்சரமர்த் தனமாய்த், துயர்வனவித் தொமசனமா யெவ்வழியெஞ் ஞான்றாந் தனுமுயற்சியின்றியதி சுலபமதே யாகி. வயவுளத்தர்க் கினியதுவாய்ப் பாவனமாய்ச சிவற்கே வருதிருத்தி யேதுவதாய் வாரியமற் றதுவாய்க, கயமிலதா நிதியாகும பயிககவுண வெனவே கருணையுள யோகிகணங் கழறியரு ளுவரால்.

(போ - ரை.) பிக்ஷான்னமானது, அநைந்யமென்றும், நிரதிசய சுகமென்றும், எவ்விதத்தும் பயமற்றதென்றும் துர்மாற்சரியமதாபிமான மதனமென்றும், துக்கக்கூட்ட வித்வம்சனமென்றும், யாண்டுமெஞ்ஞான்றும் அப்பிரயத்தின சுலபமென்றும், சாதுப்பிரியமென்றும், பவித்திரமென்றும், சம்புவின் றிருத்தி யேதுவென்றும், தடுக்கக்கூடாததென்றும், அக்ஷயநிதி யென்றும் யோகீசுரர் புகழ்வர். (30)

3 - வது யாஞ்சாதைன்ய தூடண முற்றும்.



## 4 - வது போகாஸ்தைர்ய வர்ணனம்

போகமுங் குலமும் பொருளொடு மானம் பொலி வுறு நூலொடு குணமு, மாகமென் னிவற்றிற் பிணியழி வரசா லரியதீ னதைசரையரியான், மோகவா தியராற் றீய ரா னமனுன் முற்றுறு பயம்புளி நரர்க்காஞ், சோகவெவ் வியாவும் பயத்தொடு விரவுஞ் சொல்பய மில்லைவராக்மமே.

(**போ - ரை.**) போகத்தில் ரோய்ப்பயம், குலத்தில் ஆசாரப் பிரம்சபயம், பொருளிலரச பயம், மானத்தில் தைன்யபயம், பலத் திற் பகைப்பயம், ரூபத்திற் சரைப்பயம், நூலில் வாதிபயம், குணத் திற் றுட்டபயம், காயத்தில் யமபயம், புவியில் நரர்க்கெல்லாவத் துவும் பயத்தோடு கூடியதாம், வைராக்யமே அபயமாகும். (31)

சனனமோ மரணை பீடித மதிக ரருமயெவ் வனஞ்ச ரை யாலே, யினிமகிழ் வருத்த னசையினுற் சமவின் பீளை யவங்க ளேமயல் களினு, னனிகுணந் தாமோ மற்சர வுலகா னவவனப் புவிகள்பாம் பவற்றுன், மனவன்றுர்ச் சனரா னிதியழி வதனுன் மருவுரு தெதுவெத னுமேன.

(**போ - ரை.**) ஜன்மம் மரணத்தானும், நல்ல யெவ்வனம் சரையானும், சந்தோடந்தன ஆசையானும், உபசாந்திச்சுகம் நற் பெண்ணின் மயக்கானும், குணர்மற்சர லோகரானும், வனம் துட் டகஜசர்ப்பங்களானும், மன்னர் துர்ச்சனரானும், ஐசுவர்யம் அத்தி ரத்தானும் பீடிக்கப்பெறும் யாதுயாதாற் பீடிக்கப்பெறாதது, ஒன்று மின்றென்றறிக. (32)

தன்பல வாதி வியாதியின் சதத்தாற் சனங்களின் சேமம தறமான், முன்பினே யாண்டு புகுமவண் விபத்து

மூடிய திறந்தபோன் முரணும், பின்பினு முண்டா விவசரை நியதம் பின்னொடி தன்வயங் காலன், மன்புரி தருமந் நிரங்குச விதியான் மனைமெது வதுவெது திரமே.

(போ-ரை.) விவிதமாய ஆதிவியாதி சதங்களாற் சனங்களின் ஆரோக்கியங் கெடும்; லக்ஷ்மி யாண்டபெருமோ ஆண்டு வாயிற்றிறந்து வருவபோ லாபத்துக ளளவிறந்தனவாம்; மீண்டுமீண்டு முண்டாம் வச மற்றவரைக் காலன் அவசியம் சீக்கிரந் தன்மயமாக்குவன்; அந்நிரங் குசப் பிரமனால் நிர்ம்மிதமாய் யாதுதான் சுஸ்திரமாம். (33)

போகங்க டுங்க தரங்கபங் கமதிற் பொருதர லங்களா முயிர்ப்போ, வேகுமோர் கணத்தி லெவ்வனச் சுகச்சி ரின்மனை யிருத்தல்சின் ஞமோ, போகுமக் குடும்ப மசாரமே நிகிலம் புதர் கள்போ தகர்களே யுணர்ந்தே, யாகுல கருள்செய் பேசல மனத்தா லருமுயல் வுறுமினோ வுறுமின்.

(போ-ரை.) போகங்கள் துங்கதரங்கபங்கம்போற் சஞ்சலமாம்; பிராணன் கணநாசியாம்; பிரியைகள்பாலுற்ற யவ்வன சுகஸ்பூர்த்தி சொற்பதினங்களளவே; அச்சம்சாரம் நிகிலமசாரமேயென வுணர்ந்து ஏவித்வான்காள்! ஏபோதகர்காள்! உலகானுக்கிரக கோமளமனத்தான் முயலுங்கள் முயலுங்கள். (34)

காயிகள் போகங் கார்க்குழு நடுவுட் கதிர்மின லெனவலை காலு, மாயுளும் வாயு வறைமரை யிலையி லறலெனப் பங்குர மாகுங், தேயுறு மெவன லாலசை யெனவே தேர்ந்தினித் துரிதமாய்ப் புதர்கா, ளாயதை ரியச மாதியார் சுலப வரிய யோ கினின்மன மமைமின்.

(போ-ரை.) உயிர்களின்போகம் மேகக்கூட்ட மின்னலொக்கச் சஞ்சலமாம்; ஆயுளோ வாயுவசைக்குந் தாமரையிலை நீரென அழியும்;

யவ்வனமாபோகாபிலாஷை அத்திரமாம், என அறிந்து சீக்கிரம், மதி மான்களே! தைரியசமாதி சித்த சுலபயோகத்தில் புந்தியைவையுங்கள்.

ஆயுளு மலையி லழியுமெவ் வனச்சி ராஞ்சில தினமனும் பொருள்க, டேயுள நினைவை யுறமுமின் மழையிற் றிகழ்மின லெனற்றிரள் போகம், மாயமங் கையராற் களமுறத் தழுவ மகிழ்வது நொடிபவப் பயநீ, ரேயரிப் பாரங் கடந்திடப் பிரமத் தியைந்திடு மதியரா யிருமின்.

(போ-ரை.) ஆயுள் அலையொக்கும்; யவ்வனசம்பத்துச் சொற்ப தினத்தனவே; தனுதியோ மனோரத தல்லியங்களாம்; விடயபரம்பரை கள் மழைகால மின்னொக்கும்; எப்பிரியைகளாற் கழுத்தைத்தழுவிச் செய்யுங் காடாலிங்கனம் அதுவும் நீடித்ததன்றாம்; ஆதலிற் பவபயக் கடல் கடப்பான் பிரஹ்மத்தின்கண் ஆசக்தசித்தாளாமின். (36)

வேறு.

துன்புற மலநடு நியமித தனுக்களாற் றுன்னுறுங் கரு மீதி, லன்பினள் பிறிதர வுறுதுயர் விஷமமா மரியவெவ் வன போக, மின்பெழில் விழியர்க ளிகணகைக் கிலங்கிழ மென்னல நரரேரே, வன்பவ மதுதனி லணுவுங்கிஞ் சிலுஞ்சுகம் வரு மெனி னறைவீரே.

(போ-ரை.) கர்ப்பத்தின்கண் மலமத்தியில் வைக்கப்பட்ட காய த்தா லதிகஷ்டத்துடன் றிதிபெறும்; யவ்வனத்திற் சம்போகமும் பிரியநாயகியின் வியோகத்தால் உண்டாகுந் துன்பமும் விடமத்தோ டுறும்; தருணியர் அவமானபூர்வகம் நகைத்தற்கிடனும் விருத்தாவஸ் தையும் நன்றன்று; ஹே மானுடரே! இச்சம்சாரத்தி லணுவளவேனுஞ் சுகமிருப்பிற் சொல்லுங்கள் பார்ப்போம். (37)

வேறு.

புலிப்பே டென்னச் சரைவெருவைப் புகட்டிப் பொலியு மாமயங்கண், மலப்போ ரிதனை யறுத்தமரு மருவார் பொருவ மனாமாயுட், கலைப்பா யில்லிக் குடநீர்போற் கழிந்தே யொழி தல் கண்ணுற்றினு, மனுப்பா மகிதந் தனைத்தினமு மகிலம் புரி யற் புதமென்னே.

(பொ-ரை.) புலியைப்போலச் சரையானது சந்ததம் பயத்தை யுண்டுபண்ணுகிற்தும்; பகைவரைப்போல் இச்சரீரத்தை நோய்களறுக் கும்; ஆயுள், துவாரம் நிறைந்த கடசலம்போற் கழிந்தொழிந்துவிடும்; இவற்றை உலகர் கண்டும் அஹிதத்தையே புரியாநின்றனரே, இஃ தென்ன விசித்திரம்! அம்ம! அம்ம!! (38)

வேறு.

அழிவழிப் போகம் பகுவகைப் பிறப்பீ ததுகொடே யா யதிங் கதனாற், செழியெதற் காயிச் சுழலுகை யமையுஞ்சேட் டைக ளாலுல கீரே, விழைவெனும் பாச சதவுப சாந்தி விசத மா மனந்தனை விழைவே, யெழுவழி யாற்றன் னிடத்திருத் துமினே விருப்பிலன் பென்மொழி தனினே.

(பொ·ரை.) பங்கசீலங்களாம் பகுவகைப்போகம்; அதுகொண் டே யிப்பிறப்பாம்; அதனா லீண்டெதற்காகச் சுற்றித்திரிதல்; சுற்றித் திரிதலை முற்றினும் பற்றாதீர்கள்; ஹே உலகீரே! என்வசனத்தில் நுங் கட்கு அதிசிரத்தையிருப்பிற் கேண்மின்; ஆசாபாச சதவுபசாந்தத்தால் தெளிந்த மனந்தனைத் தன் சொரூபஸ்தானத்தில் நிலைபெறுத்துமின் னாசையுண்டாம்படியாற்றி; அனுராகமெழாதே னிலைபெறாதென்க. ()

வேறு.

பிரமனொடு மிந்திரனே முதலனவா னவராம் பெருங்கண ங்க டமைத்திரண கணமெனவெங் கிருந்தே, திரமெனுமோ

வெதன்சுவையாற் றிரிலோக வரசா தியவிபவம் விரசமதாய்த் திகழ்வுறுமோ யாதோ, பரமவன வரதமிளி ரொன்றதுவே யாகப் பனுபோக மிலங்கலுறு மையவருந் தவரே, புரமறவே யொருகணபங் குரமான வதின்வே றுளபோகங் களிற்களிப் பை யுறுதிருமி னிருமின்.

(பொ-ரை.) எவ்விடத்திருந்து பிரமஞானியரைத்திரணகணமென எண்ணுவரோ, எதன் சுவையால் மூவுலக அரசாய சுகசம்பத்தானது இரசமற்றதாய் விடுமோ, யாதேனவொரு சர்வோத்தம சித்யோதய சம்பன்னபோகமுண்டு அவ்வொரே பிரஹ்மானந்தநுபவோகந் துலங்குகின்றது சாதுக்களே! அதனிதரமாய கணவிநாசபோகத்தில் பிரீதியைச் செய்யாதிருமின். (40)

4 வது போகாஸ்தைர்ய வர்ணனம் முற்றும்.

---

## 5-வது காலமகிமானு வர்ணனம்.

சவிமிகு நகரும் பெரியமன் னவனுஞ் சாமந்த வலயமு மவற்சூழ், கவிகளின் குழுவுங் தாசரு மவன்றன் கலைபதி முகவரி வையரு ஞ், சுவைமதி மதக்த கோமகக் குழுவுஞ் சுபட் வழுத் துளரவன் கதையென், னெவையுமி யார்வயத் தாலெனை நெறியுறுமோ வெழி லக்காலனைப் பணிகுதுமே.

(பொ-ரை.) அந்த இரம்மிய இராஜதானியும், அப்பெரிய மன்னவனும், அவனைச்சூழ்ந்த அவ்வரசமண்டலமும், அவன்றன் அவ்வித்வத்சபையும், அவன்றன் சந்திரபிம்பானனவச் சுந்தரிகளும், அவன்றன் அவ்வுத்தண்ட அரசகுமாரவர்க்கமும், அவன்றன் அத்துதிபாடகரும், அவன்றனக்கதைகளும், ஆயவிவையாவும் எக்காலன் வயத்தாற் ஸ்மரண மார்க்கத்தை யடைந்ததோ அக்காலன்பொருட்டு நமஸ்காரம்.(

எவ்விலத் தொருபோ தளவில ரிருப்ப ரிலமதி லொரு வன்பின் னிருந்து, மெவ்விலத் தொருவ னுளன்பினம் பலர்க ளிருப்பாங் கிறுதியிற் பாழா, மிவ்வகைப் புவனப் பலகையி னுழலு மின்னுயிர்க் காய்களா லாட்டிற், செவ்வெம னிருபோ திருவினைக் கோல்க ளினிதினி னுருட்டியா டிடுமே.

(பொ-ரை.) எந்தவீட்டில் ஒருகாலத் தளவில்லாதவ ரிருப்பரோ அதிற்றானே மற்றொருகால் ஒருவனிருப்பன்; எவ்விடத் தொருவனோ பின் பலராண்டிருப்பர்; முடிவிலாண்டு சூனியமாம்; இவ்வண்ணம் புவனப்பலகையி லுழலாநின்ற சீவக்காய்களாற் சூதாட்டிற் சிறந்த எமன் இருவினைக் கோல்களை நன்றாயுருட்டி யாடிடுவன். (42)

தினகர னுதித்துக் தினந்தினஞ் செலாற் றேய்வுறு மாயுள்பல் செயவாங், கனகுருச் செயலாற் காலமு மறியார் கண்டிடுற் பிறப்பொடு விபத்தி, மனுசரை மரணம் பீதியு முற வின் மாசக மோகவெம் மபமா, முனுபிர மாத வெண்ணறை பருகி யுன்மத் தபூதமா யதுவே.

(பொ-ரை.) சூரியன்றன் போக்குவரவால் ஆயுள்போம், மிகு காரிய பாம்பரா கனவியாபாரத்தாற் காலம்போவதுந் தெரிவதின்றாம்; சனனம், சரை, ஆபத்து. மரணம் என்னு மிவற்றைக் கண்டும் பய முண்டாகவில்லை, ஆதலிற் சகத்தானது மோகமயப் பிரமாதக்கள்ளைக் குடித்து உன்மத்தபூதமா யிருக்கின்றது. (43)

இரவொடு பகலு மீண்டது வருமே யெண்ணியு முயல் வா யறியா, ரொருவரு மறியா நெறிதொடு தொழிலை யுடை யாராய் மறித்துமத் தகைத்தாங், கிரியையால் வாளா சுழல் வுறு நிற்பர் கிளைநமில் விதவிருமம் பவத்கா, விரியிழி வியையா மற்புத மோக மிதுதனின் வெட்கில மெனையோ.

(போ-ரை.) இரவுபகல் மீண்டதுவதுவேயென வறிந்தும் மூடர் முயல்பவராய் அன்னணமே ஒருவரு மறியாதபடி பெருந்தொழிலை யுடையராய் மீண்டுமீண்டும் அத்தகைத்தாய தொழில்களால் வீணுய்ச் சுழலுவர்; இவ்வண்ணம் இச்சம்சாரத்தால் இழிவுபெற்ற யாம் அந்தோ இதனினின்றும் வெட்கத்தை யடைந்திலேம். (44)

பரசிவன் பதத்தை விதிப்படி பணியேம் பவமரி யறப்பா வுலகி, னொருதிருக் கதவந் திறப்பதில் வலிய வுயாற மெவற் றையு முஞற்றேநந், தருணியர் பருத்த வுயர்குப யுகத்தைத் தழுவிலங் கனவினும் வறிதே, யருளனே யெவன வனந்தனே யழிப்ப வமர்ந்தகோ டாலிதா னுமே.

(போ-ரை.) சனனமரண சம்சாரம் நீங்கப் பரமசிவன் பதத்தை விதிப்படி பணிந்திலேம்; சுவர்க்கலோகத்தின் திருக்கதவு திறப்பதிற் சாமர்த்தியமுடைய உயர்ந்த தர்மமெவற்றையுஞ் செய்திலேம்; தருணி யரின் பருத்த வுயர்ந்த ஸ்தன்யங் தழுவிலங் கனவினும்; வீணுய்த் தாயா ரின் எவ்வன வனந்தனைக் கெடுக்க அமர்ந்த கோடாலிதான் யாம். ()

வேறு.

நல்லவர்கட் குரித்தாகி வாதியரின் குழுவை நறுக்குமெ ருங் கல்வியினைக் கற்றிலமா கயத்தின், புல்லுகும்ப பீடமதைப் பிளந்திடுவா ளுனியாற் புகழதனைப் பரபதத்திற் புக்கவிடுக் கிலமாற், பல்லதுற நிலவெழுங்காற் சிறுமியர்கோ மளமாம் பல்லவமெல் லதாரசம் பருகியறிந் திலமால், வல்லதருணப்பரு வம் வறிதேசென் றதுவால் வதியும்பா ழாலயத்தில் விளக் கொளிபோ லந்தோ.

(போ-ரை.) நல்லவர்கட் குரித்தானதாய் வாதியர் கூட்டத்தை நாசஞ்செய்யும் பெருங் கல்வியினைக் கற்றிலம்; பெரிய யானையின்

கும்ப பீடமதைப் பிளக்கும் வாள் நுனியாற் புகழ்ச்சியை வீரசொர்க்கத்திற்கு அனுப்பித்திலேம்; பூரண சந்திரிகையிற் பற்படும்படிக் கோமள இலைபோன்ற சிறுமியர் அதராசத்தைப் பருகியறிந்தோமு மில்லை; நல்ல யவ்வனப்பருவம் வீணே சென்றது பாழாலயத்தே வைத்த பெருந்தீபப் பிரகாசம்போல். (46)

வே று.

கல்வியினைக் களங்கமறக் கற்குகிலஞ் செல்வமுமே கருதிச் சேர்த்தேதம், நல்வினையு மீன்றோர்க்கு நன்மனத்தா னவிற்றுகிலம் நடன நீட்சி, யல்விழியா ரரிவையரைக் கனவதினு மணையுகில்லே மயலார் சோற்றி, னில்விழைவா லிக்காலங் காரிகளா லெனவேவ வேய்ந்த தென்னே.

(பொ ரை.) கல்வியினைக் களங்கமறக் கற்றிலேம்; செல்வமும் பாடுபட்டுச் சேர்த்திலேம்; தாய்தந்தையர்க்கு நல்ல மனத்துடன் பணிவிடையுஞ் செய்திலேம்; சபலமாய் நீண்ட மைக்கண் அரிவையரைக் கனவினுங் கட்டியணையேம்; அயலார் சோற்றின்கண் ஆசையுடையரா யிக்கால்வாயசங்களாற்போற் பிரேரிக்கப்படுவதென்னே. (47)

வே று.

நாமெவர் பானின் றுதித்தன மவர்முன் ஞைசமே தின்ணநண் ணினரா, ஞமெவ ரோடு நல்வளர் வுற்றேம் நண்ணின ரவருமோர் நினைவாய்த், தோமிவ ரிக்கா லனுதினம் பதனந் தொடர்வராய் மணனிறை யாற்றி, னேமுறு தீர தருக்களி னேடு மிணையவத் தையையியையந் திடுமே.

(பொ-ரை.) யாம் எவரிடத்தினின் று உதித்தனமோ அவர்முன் நாசமே யடைந்துவிட்டனர்; யாம் எவரோடு வளர்ந்தோமோ அவரும் ஒரு நினைவுருவமாய்விட்டனர்; இவரோ இப்போது தினந்தினம்

அழிவை யெதிர்பார்ப்பவராய் மணல்நிறைந்த நதியின் கரை மரங்களோடு மிணையவத்தையை யடைவர். (48)

நரருறு மாயு ளூறள வாகு நமுவுறுந் துயிலிலே பாதி, பாலினவ் வரையி னயலொரு பாதி பாலதை கிழமையிற் கழியு, மொருவிய வழிவு பிணியிட ரோடு முறுபல சேவையா லொழியுங், கருவரி யலையி லுழறரு வாழ்விற் காணலெவ் வணஞ்சுகமுயிர்க்கே.

(போ-ரை.) மனுடர்க்காயுள் நூறாம்; பாதி துயிலிற்போம்; பாதியிற்பாதி பாலியவிருத்தா அவஸ்தைகளிற் கழியும்; சேஷமோ புத்ராதி வியோகத்தாலும் பிணியாலுமுண்டாம் துன்பத்தோடுற்ற சேவாதிகளாற் கழிகின்றது; வாரிதரங்க சஞ்சலதர ஜீவனத்திற் பிராணிகட்குச் சுகமெங்ஙனமாம். (49)

கணத்தினிற் பால னாகியே கணத்திற் காமவி ரசிகனெவ்வனனாய்க், கணத்தினிற் றனத்தி னீனனாய்க் கணத்திற் கணக்கறும் விபவனாய்ச் சரையா, லுணத்துறு முடலா னடனெனவலிக ளுறைதரு தனுவனாய் மனுட, னெனத்தகு குடும்ப வீற்றினிற் புகுவ னெமபுரி யிடையுடல் விடுத்தே.

(போ-ரை.) கணத்திற் பாலனாய், கணத்திலே காமரசிகத்தருணனாய், கணத்திற் றனஹீனனாய், கணத்திலே அளவற்ற ஐச்வரியவானாய், ஜரையாற் சீரணமான அங்கத்தினாற் றேற்சுருக்குகணிறைந்த உடலுடையனாய் மனுடன் நடனெனச் சம்சாராந்தத்தில் தேகத்தை விடுத்து யமபுரியடைவான். (50)

5-வது காலமகிமானு வர்ணனம் முற்றும்.

---

## 6-வது யதி நிருபதி சம்வாத வர்ணனம்.

நீராசன் யாமுமருட் குருவினையே பணிந்தே நிமலவறி வபிமான வன்னதர்க ளாவேம், நீராதி யாற்பெருமை யுறுவை யெம திசையை நீள்புலவ ராசைகளி னீடுறுமா புரிவர், சோரா வில் வணமான தனமதா தியினுற் சொல்பேதஞ் சேய்மையதா மிருவரா நமக்கு, மோராதெம் மிடத்துநீ புறமுகனு குதியே லுயர்யாமு மொருசிறிது மொன்றைவிழைந் திலமே.

(**போ-ரை.**) நீ அரசன், யாம் அருட்குருவைச் சேவித்துப் பெற்ற பிரஹ்மஞான அபிமான வன்னதர்களாவேம்; நீ ஐசுவரியத்தாற் பெருமையுறுவை; எம்புகழ்தமைத் திசைகளி லோங்குமாறு புலவர் புரிவர்; இவ்வண்ணம்மான தனமதாதியாற் பேதமிருவர்க்கும் வெகுதூரத்ததாம்; நீ என்னை உபேக்ஷிக்கினு உயர்ந்த யாமும் நின்னை யுபேக்ஷித்து விடுவமென் றறிதி. (51)

இரும்பொருட்கட் கீசனீ யெனின்யாமு மருத்தமெத் துணையாம் வாணிகட்கு மீசனு யிருப்பேம், பருஞ்சூர னீயெ னினு வாதிதர்ப்ப நூக்கப் படும்படியி லக்கியமாம் பாடவ முண் டெமக்கே, பெருந்தனிகர் நினைப்பணிவ ரெனின்மதி யின் மலத்தைப் பிளந்தெறியக் கேள்விநசை யினரெமையும் பணிவர், திருந்தெம்பா னினக்காஸ்தை யிலதேனின் பாலுந் தெளிவெமக்கு மொருசிறிது மாஸ்தையிலை வேந்தே.

(**போ-ரை.**) பொருள்கட்கு ஈசன் நீயெனின் பொருட்சகித நூல்கட்கு ஈசன் யாமாவேம்; பெருஞ்சூர னீயெனின் வாதி தர்ப்பத்தைக் கெடுப்பதி லெமக்கும் பகுசாமர்த்தியமுண்டு; பெருந்தனிகர் உன்னைப் பணிவரெனின் மதிமலஹதத்தின் பொருட்டுச் சிரவணேச்சுக்க ளெம்மைப் பணிவர்; எம்மிடத் துனக்குச் சிரத்தை யில்லையேல் எமக்கும் நின்பா லுபேக்ஷயே யென்றறிந்துகொள். (52)

வேறு.

மகிழ்வீண் டுறுவேம் வற்கலையான் மன்னு நீது கூலத்
தான், மகிழ்வோ சமமே யாஞ்சிறப்போ மனுநிர்ச் சிறப்பா
மவனாக, மிகவு மிடிய னெவற்காசை மிளிரு மளவி னுளவுள
த்தே, மகிழ்வை யுறினே தனவானார் மருவ லிலம்பா டெவன்
றனக்கே.

(போ-ரை.) யாம் வற்கலைகளாற் சந்துஷ்டர்களாவேம், நீ பட்டு வஸ்திராதியா லாவாய், இருவருக்கும் மகிழ்வொன்றே, யாதுஞ் சிறப் பின்றும், எவனுக்குத் தன ஆசை விசாலமோ அவனே தரித்திரனும், மனமானது மகிழ்வை யடைந்திருப்பின் தனவானியாவன் தரித்திர னியாவன். (53)

பலமே சாலு மயில்வதற்குப் பானங் குயிற்றற் கறல்
சாலும், மலமாம் பூவு மணைப்பொருட்டா யாடைப் பொருட்
டாய் வற்கலையும், பொலமாம் புதிய மதுமாநதிப் பொறிக
ளவையு மயங்குகலர். நலமாம் விநய மின்மைதனை நயந்து
கோடற் கெண்ணேமால்.

(போ-ரை.) புசிப்பதற்குக் கனி போதியதாம்; மதுரநீர் பருகற் குச் சாலும்; சயனிப்பான் பூமியே போதியதாம்; வற்கலை ஆடைக் கமையும்; நவதன மதுபானத்தால் விபரீதப்பட்ட பொறிகளோடுற்ற துர்ச்சனர்களின் அனாதரத்தை அங்கீகரிப்பான் இச்சியேம். (51)

வேறு.

அயில்வெம்பயிக் கந்தனை யாடைய தூஉம்
பயிலாசைய தாகவும் பற்றிடு வேம்
துயில்வேமகி மேலொரு துன்பமி லேம்
செயல்யாபெது சீருறு செல்வர்க ளால்.

(பொ-ரை.) பிக்ஷை பிடித்துண்பேம், திக்கை யாடையா யுடுப்பேம், பூமிமேற் றுயில்வேம், துன்பமில்லாத யாம் செல்வர்களாற் செய்யற்பாலதென்? ஒன்றுமின் றென்பதாம். (55)

வேறு.

நடரு மன்றுநாம் நாம்விட ரன்றுகா யகரு
மடரு மன்றவைக் கருகரி னயன்மொழி யவிர்வேம்
படரும் பொற்றனக் கனங்குனிப் பாவைய ராகே
மிடரு மன்னனைக் காண்புற விவணெவர் யாமே.

(பொ-ரை.) யாம் நடரன்று, விடரன்று, பாடகரன்று, சபையுற்றுப் பேசுவருமன்று, தனபாரத்தால் வளைந்த மங்கையுமன்று, மன்னனைக் காண யாமியார். (56)

வேறு.

விரிமன வீசர் முன்னிவ் விசுவத்தை விரித்தார் மற்றோர்
பரிதரல் புரிந்தார் செற்றே பார்தரும் பெனவே யீந்தார்
சரிசிலின் ஞான்றுந் தீரர் சதுர்த்தசப் புவன முண்பா
ரிரிசில புரமாள் வேந்த ரிம்மதச் சுரம தென்னே.

(பொ-ரை.) முன்னுதார மதியரான அரிச்சந்திராதியராய சார்வ பௌமரால் தர்மாசரணத்தா லிவ்வுலகம் சம்ஸ்தாபிதமாயது; யயாதி யாதியர் பரிபாலித்தார்; மாபலி முதலினோர் சயித்துத் திரணம்போல் தானஞ் செய்தனர்; இப்போது மன்னியதீரர் பதினன்கு புவனங்களையும் புசிக்கின்றனர்; சிலபுரமாள்வதிற் புருடர்க் கிம்மதச்சுரமென்? ()

வேறு.

எப்புவி யாசரீட்டினுற் கணமு மிருந்திலை யருந்திடாததன்றன், வைப்பினு லாசர்க் குறுபுக ழென்னே வண்ணதனங்கிசாங் கிசத்துஞ், செப்பத னவய வக்கணத் தினிலுஞ்

செறிசட விறைபவர் செயிரைர, யொப்புற விருப்ப மாறுபட் டனிச முலேமுத முறுவதென் னம்மா.

(பொ-ரை.) எப்பூமியானது அரசர் கூட்டத்தாற் கணமும் புசிக் கப்படாதிருந்ததில்லேயோ அதன் இலாபத்தான் மன்னவர்க்குப் பரு மானமென் அதனம்சத்தின் அம்சத்தினும் அதனவயவலேசத்தினும் சட அரசர்கள் துன்புறவேண்டியதிருப்ப மாறாய் மகிழ்கின்றனர். ()

வேறு.

சலரேகை யதனுேனை வலயிதமே யாமிச் சருவமணின் பிண்டமுமோ ரணுவாகு மதையே, கலகசதங் களினேனை தம் பாகம் புரிந்தே காவலரின் கணமருந்து முற்றினுமா யினை, இல ரினை வன்னவர்க ளீவரி கின்றார் கேதமய லென்னைகொலா மவர்பாலி னின்றுஞ், சிலபுருட வதமரெவர் தனலேசம் விரும் பித் திரிதருவர் சீசீயிங் கவர்பிறந்த கேடே.

(பொ-ரை.) சலரேகையால் வளைவுற்ற இம்மட்பிண்டம் யாவும் ஒரு அணுவாம்; அரசக்கூட்டங்கள் யுத்தக்கூட்டத்தானே அதனையே தத்தம் அம்சமாகச் செய்துகொண்டு புசிக்கின்றனர்; அவர் கொடுப்பர் கொடுக்கின்றார் என்பதைவிடத் துக்கம்வேறென்; ஹீனதீன அவர்பா னின்றும் எப்புருடாதமர் தனலேசத்தை வாஞ்சிக்கின்றனரோ அவ ரைச் சீசீயெனத் தள்ளுக. (59)

வேறு.

அவரினைவ னேமற் றொருவனு மதன்ற னரியினு னுயர் தரு சிரத்தே, யெவனுடைச் சிதக மலங்காப் பொருட்டா யினைபந்தே தா வுயிரினைக் காக்குங், கவன்மதி யேய்ந்து வணங் குநின் னராரற் காணுமிப் பொழுதும்வெம் புருடர்க், குவமாறு மெலேயி லிம்மதச் சுரத்தி னுனுகன மென்பொருட் டறியேம்.

(பொ-ரை.) அவனெவனே ஒருவன் சபலப் பிறப்பினனாவன், எவன்றன் வெண்கபாலம் அலங்காரப்பொருட்டாய் உயர்ந்த சிரத்தின் கண் மன்மத தகனனாற் றரிக்கப்பெற்றதோ, இப்பொழுது உயிர் காக்குங் கவலைமதியோடு வணங்குஞ் சில நரரால் இப்புருடர்க்கு அளவற்ற மதச்சுரபாரம் யாதின்பொருட்டோ அறியேம். (60)

6-வது யதிநிருபதி சம்வாத வர்ணனம் முற்றும்.

## 7-வது மனச்சம்போதன நியமனம்.

அநுதின மனியர் மனங்களைப் பலவா மாற்றினிற் பணிந்தரு ளசற்கொள், ளினியருள் மனமா றனுதியென் மனமே யிருந்துளி னின்கணை தெளிவை, மனுதியேற் சுயமா யுதிதரு சிந்தா மணிகண விவிக்தசங் கற்ப, முனதுவாஞ் சிதத்தைப் பூரண மாக வுருற்றுறு தென்னுரைத் திடுநீ.

(பொ-ரை.) மனமே! நீ அயலார் மனங்களைக் கிலேசத்தோடும் நாநாவிதம் ஆராதித்துத் தினந்தினம் பிரசாதமடைவான் என் பிரவர்த்திக்கின்றனையோ! நீ உள்ளிற் றெளிவை யடைவையேற் றுனே யுதயமாம் சிந்தாமணி கணமாய நிஷ்களங்க சங்கற்பம் நின்வாஞ்சிதத்தைப் பூரிக்கச் செய்யாதா என்? (61)

வே று.

மதியேநீ சுழலுதியென் வாளாவோ ரிடத்திலேயே மருவி வாழ்வா, யெதுதானெவ் வணமாமோ வவணமஃ தியல்பாயா மிறைவே றுகா, திதமாய்ச்சென் றதைநினையா தினிவருவதையுமெண்ணா திருந்தார்க் கேயா, ததுவாய்வந் துறுபோகங் களையயில்வே னசையின்றி யம்ம யானே.

(பொ-ரை.) புத்தியே! நீயேன் வீணாய்ச் சுற்றுகின்றனை! எங்கேனும் விசிராந்தியுறுவாய்; எது எங்ஙனமாகவேண்டுமோ அதுதானே

அங்ஙனமேயாம், மாறுயாகாது; சென்றதை நினையாது, வருவதையு மெண்ணாது, சிந்தியாது வந்த போகங்களை யானனுபவிப்பேன். (62)

துயர்மய மாமிப் பொறிப்புல வனத்தின் றொடர்விடு கணந்தனி னெல்லாத், துயர்துடை தொழிலில் வலியதா மோக் கத் தூநெறி தொடருதி தனதின், னுயருருத் தகைமை யடை தினூக் குதியுன் னூர்மியொப் புறுசல கதியைக், கயபவ ரதி யைச் சேவியன் மறித்துங் களிமதி தெளிதியிப் பொழுதே.

(போ-ரை.) துன்பமய இவ்விந்திரியார்த்த வனத்தினின்றும் விராமமடைதி; கணமாத்திரையில் சேஷ துன்பத்தைக் கெடுக்குந் தொழிலிற் சமர்த்தமாய சிரேயசு மார்க்கத்தை ஆசிரயி; ஸ்வரூபானு சந்தான தற்பரத்தன்மையை யடைதி; நின் அதிசபல வியாபாரத்தை யடையாதிருத்தி, மீண்டும் அசாஶ்வத சம்சாரசக்தியை யடையாதிரு த்தி, இப்பொழுது பிரசன்னமா யிருத்தி. (63)

மாலெலா மொழிதி பிறைச்சிரோ மணியன் மாட்டுரு குத லினைக் கவர்தி, யேலவே மாகத் தரங்கிணித் தடத்தி னிடத் தினை யிருப்பென விசைதி, சாலவாந் தரங்க புற்புத தடித்தின் றனிவரித் திருக்களி லழலின், கோலமாஞ் சிகையொ டரவுற வினர்பாற் கொள்ளுறு மன்பெனோ பயனே.

(போ-ரை.) மோகத்தை விடுதி; இளம்பிறை சூடிய எந்தையி னன்பைச் சம்பாதித்திடுதி; தேவநதியின் கரையை வாசஸ்தானமாகக் கொள்ளுதி; ஏ சித்தமே! தரங்க புற்புத மின்னற்குச் சமான ஐஶ்வர் யத்தினும், சுவாலைநுனி பன்னகசமான* சுகிருத்வர்க்கத்தினும், என்ன விசுவாசம் செய்யத்தக்கது? விசுவாசம் செய்யத்தகாதாமென்க. (64)

* சுகிருத் = உறவினர்.

வேறு.

நிலையதிலாப் பூபாலர் புருவவிலந் தனிநேன நிதஞ்சுழலுந் தொழிலானே பிறழ்ச்சியளா மிந்தச், சலையையொருபொழுது மா தாரத்திரெனுடு நினையேற் சனிமனமே கந்தைநல கஞ்சுகமா யணிந்தே, அலைபுனல்சூழ் காசிநக ரரசநெறி களிலே யமர் பவன வாயிறொறும் புகுந்துகர கலத்தே, நலமதொடும் வந்து விழு நற்பயிக்கந் தனையே நலிபசிசென் றொழிந்திடவா னுழும் விழைந் தனமே.

(பொ-ரை.) மனமே நீ நிலையுள்ள அரசர்க ளின்புருவக் குடிலை யின்கண் நிதஞ்சுழலுந் தொழிலானே வியபிசாரத்தை யுடையளா மிச் செல்வியை யொருபொழுது மாதரவினோடு நினையற்க; கந்தையைச் சட்டையா யணிந்து கங்கைசூழ் காசிநக ரரசவீதிகளிலுள்ள வீடுகளின் வாயிறோறும் சென்று அஸ்தபாத்திரத்திற் பிரீதியோடும் போடும் பிக்ஷான்னத்தையே யாம் பசிநீக்கும்பொருட் டிச்சிக்கின்றேம். (65)

வேறு.

தன்முனங் கீதந் தாக்கிணுத் தியாஞ் சரசவின் கவிகளீர் மருங்கே, பின்மனுங் கவுரி கவரரி வையரின் பேசுவீ லாவளீ யொலியே, யென்மன விவண முளதெனி னசையை யியற்றுதி பவரசச் சுவைப்பில், மன்மரு விலையேல் விரைவினில் விகற்ப மருவறு நிட்டையின் மகிணீ.

(பொ-ரை.) தனக்கு முன்னர்க் கீதமும், இருபக்கத்தினும் ரசத் தோடேற்ற கவிபாடும் தக்ஷிணதேயத்துப் புலவரும், பின்னர்ச் சேடியர்களின் சாமரைவீசுங் கைக்கங்கண சப்தமும் உளதாமே லுள்ளமே! பவரசச் சுவைப்பிலிச்சைவை (சம்சாரசுகத்திலிச்சைவை); இல்லையேல் நிருவிகற்ப நிட்டையின்கண்ணே மகிழுதி. (66)

வேறு.

சகல காமந் தருந்திருவைத் தனுவி னோர்கள் சாரினு மென். பகையின் முடிமேற் பாதமதைப் பதிக்கும் படியே படைத்திடினென், மிகவும் விபவங் களினானே மினிர்மித் திரரை மேவிடினென், பகரித் தனுத்தான் கற்பம்வரை பருத்து மிருந்தும் பயனென்னே.

(பொ-ரை.) இச்சித்ததை யெல்லாந் தருந்திருவைச் சரீரிகள் சார்ந்தாலுமென்னே, பகைவரின் சிரத்தின்கண்ணே பாதத்தை வைத்துவிடிற்றானென்னே, மிகுந்த ஐஸ்வரியங்களினானே மித்திரர்களைச் சம்பாதித்துவிடிற்றானென்னே, இச்சரீரமானது கற்பகாலபரியந்தம் நிலைபெற்றுந்தான் பயனென்னே. (67)

வேறு.

பவனிடத்திற் பத்தியினைப் பதித்திடுக பதிக்கனுள பவநா சத்தி, னிவர்பயத்தை யெண்ணுறுக வுறவினர்பா னேசமிசை யென்மா மாரன், வெவுகருமக் குடன்படேற் கூட்டுற வின் றேடமின்றி விசன மான, நவவனங்கள் புகின்விரக்தி யுறுமிதிலென் னதிகமே னயக்கற் பாற்றே.

(பொ-ரை.) பரமேசுரனிடத்தே பத்தியைச்செய்தி; சனனமரண சம்சாரபயத்தை நினைதி; உறவினரிடத்து நேசமொழிதி; மன்மத விகாரமடையாதிருத்தி; சம்சர்க்கதோஷமின்றிச் சனமற்ற வனங்கள் புகத்தக்கனவாம்; ஆண்டோ வைராக்யம் உளது; இதற்குமேல் நமக்கென்ன இச்சிக்கத்தக்கது. (68)

ஆதலினு னனந்தமா யஜரமாய்ப் பரமாகி யமர்ந்தே யாண்டுஞ், சோதியதா மப்பிரமஞ் சிந்தனைசெ யிவ்வசத்தின் விகற்

பத்தாற் றுதைவதென்னே, யாதினனு ஷங்கிநினக் கிப்புவன வதிபதித்வ யசசு போன்ற, தீதுபயில் போகமெலா நிட்டை பெறுர்க் குடன்படலாய்ச் செறிவ வன்றே.

(போ-ரை.) ஆதலினுல் நாசமற்றதாய்ச் சரையற்றதாய் மேலாய்ச் சர்வகதமாய்ச் சோதியாயிலங்கும் பிரமத்தைச் சிந்தனைசெய்தி, இவ் வசத்தின் விகற்பத்தாற் பெறுவதென்னே, பிரஹ்மத்தியானியாகிய நினக்கு இப்புவனுதிபத்திய போகங்களெல்லாம் நிட்டையடையார்க் குடன்படலாய்ச் சேரப்பெறுவதல்லவா? (69)

பாதலத்திற் புகுகின்றுய் மனமேநீ நபங்கடந்து பறக்கின் றுயால், சாதமுற வட்ட திசை மண்டலங்கள் சுழலுதிசஞ் சல த்தி னுனே, மாதிரமா மான்மவித விமலமதாம் பிரமமதை மயலி னுனுந், தீதறவே யென்னேநீ சிந்தியா யெதனுனே திரவீ டுண்டாம்.

(போ-ரை.) பாதாளத்திற் செல்லுகின்றனை; மேலுலகங்களையுங் கடக்கின்றுய்; எண்டிசை மண்டலங்களுஞ் சுற்றுகின்றனை சஞ்சலத்தி னுல்; நிலைபெற்றதாய்த் தனக்கினியதாம் நின்மலமாயிலங்கும் பிரமத் தை மயங்கியும் என் சிந்தியாமல் மனமே! நீ யிருக்கின்றுய்? எதனைச் சிந்தித்தான் மோக்ஷமேயுண்டாய்விடுமோ. (70)

7-வது மனச்சம்போதன நியமனம் முற்றும்.

---

## 8-வது நித்தியாநித்தியவஸ்து விசாரம்.

மறையொடு மிருதி புராணநீள் படன மகவிரி வரியநூல் களினு, லறைதிவக் ராமக் குடில்வசி பலத வருங்கரு மத்தொ ழின் மயலா, லுறுவதென் பவதுன் பின்கன ரசனை யொழிபிர ளயவன றனது, பெறுசெயல் சுகத்தின் பதத்தையொன் றொழித்துப் பேசனவ் வணிகர்செய் பணியே.

(போ-ரை.) சுருதி ஸ்மிருதி புராண மகாவிஸ்தார சாஸ்திரங் களைப் படிப்பதினாலென்? சுவர்க்கக்கிராம குடிசையில் வாசஞ்செய்விக் கும் பயன்றருங் கர்மக்கிரியா விப்ரமத்தாலென்னே? எதை யொழித் தெனின்:—சனனதுன்பபாரமெழலை யழிப்பதற்குப் பிரளயாக்கினி யாப ஸ்வாத்மானந்த பதப்பிரவேசச் செய்கையொன்றை யொழித்தெ ன்க; மற்றவையே வணிகவியாபாரம் போன்றதாம் என்றறிக. (71)

திருவுள மேரு வெதனினூற் கடைக்காற் றீயினின் வளை ந்துரு குறுமாம், பெருமிரு பகரக் கிராகமே விடமாம பெருங் கடல் வற்றுறுந் தரணி, தரபதத் தானுந் திருகமாந் தரையே தளர்வுறுங் கரிகல பகர்ண, வொருநுனிச் சபல மொத்துறு காயத் தூ றுங்கதை யுரைப்பதென் னுரையே.

(போ-ரை.) சம்பத்துள்ள மகாமேருகிரியானது யுகமுடிவக்கினி யாற் பீடிக்கப்பெற்று வீழ்கின்றது, மகரங்கட்கும் முதலைகட்கு மிட மாகிய பெருங்கடல் வற்றும், பெருமலை சிறமலைகளால் நிலையாம், தரையுமழியும், எனின், யானைக்கன்றின் காதினுனியொத்த சஞ்சலக் காயத்தின் கதை யென்னே, அவசிய மழியுமென்பதி லையமின்று மென்க. (72)

ஆகமுங் குறைந்த தருநடை தளர்ந்த தமரெயி றுதிர்ந் தன விழிவீ, றேகிய செவிட தெழுந்தது வாயி லிழிந்தது கோழையின் னுறவோ, ராகுறு மொழியா தரித்திலர் மனைவி யாற்றிலள் பணியருஞ் சுதனே, வேகினன் பகையா யையகோ துயர மிந்நர ருறுங்கிழ வயதே.

(போ-ரை.) தேகம்வாடியது, நடைதளர்ந்தது, தந்தபந்தி சிந்தின, கண்பட்டது, காது செவிடாயது, வாயிற்கோழை யொழுகுகின்றது, உறவினர் வாக்கியத்தை ஆதரித்திலர், மனைவி சேவை செய்திலள், மகன் பகையாயினன், அந்தோ! அந்தோ! இப்புருடரின் கிழத்தனை மை துன்பத்திற்கே யிடமாம். (73)

வேறு.

தலையின் மயிரின் றவளிதத்தைச் சடுதி நோக்கித் தருணியர்க
ளலெசெய் சரையின் பரிபவத்தி னகம தாயா ரோபிதமாம் [ன்
வலிய வெலும்பின் சதகமுறும் வறுமைப் புருடன் றனைபக்கா
மிலேமி லேச்சர் கூபமென மிகுதூ ரத்தே விட்டொழிவார்.

(பொ-ரை.) தலைமயிரின் வெண்மையைத் தருணியர் நோக்கிச் சீக்கிரம் சரையால்வரும் அவமானஸ்தானமானதும் வெளியேதோற்று மெலும்பின் கூட்டங்களோடு கூடியதுமாய புருடசரீரத்தை மிலேச்சரின் கூபம்போல் மிகுதூரத்தில் விட்டொழித்துவிடுவார். (74)

வேறு.

எத்துணைச் சுபமிக் காயநீ ரோக மெத்துணைத் தூரமே சரையா, மெத்துணைப் பொறிகள் வலியுற விலேயோ வெத்துணை யொழிந்தில தாயு, எத்துணை பேதற் குயர்வுற விதுஷ ஞன் மிக முயல்வுறல் கடனாம், பத்திய பினந்தீ யிலந்தனிற் கூபம் பறித்திட முயறலெத் தகைத்தே.

(பொ-ரை.) எதுவரை இத்தேகம் ரோகமின்றிச் சொஸ்தமாயிருக்குமோ சரையணுகாதிருக்குமோ இந்திரியங்கள் சத்தியுள்ளனவாயிருக்குமோ ஆயுள் கழியாதிருக்குமோ அதற்குள் அறிஞன் தனக்குரிய நன்மையில் முயலவேண்டும்; கிரகத்தில் நெருப்புப் பற்றிக்கொண்டபின் கூபந்தோண்ட முயலுத லெத்தன்மைத்தாம்; ஆதலாலுடனே முயன்று முத்திக்குறுநெறியில் முந்தவேண்டு மென்பதாம். (75)

தவமதைப் புரிவ ராகிவா னதியைச் சார்ந்துவாழ்ந் திடு
துமென் விநய, நவமுறக் குணவு தாரமா மணையைத் தழுவி
வாழ்ந் திடுதுமென் னூலின், குவையினை யலது விவிதகா
வியமீ குளிரமு திரதமாந் துதுமென், னவசில நிமிட வாயுளூ
ரூடே யாற்றலென் னறிகில் மியாமே.

**(போ-ரை.)** தவஞ் செய்பவராய்க் கங்கையை யடைந்து வாழ்வோமா? விநயத்தோடும் அநேக நற்குணலங்கிருத மனைவியைக் கூடி வாழ்வோமா? சாஸ்திர சமுதாயத்தினையேனும் நானாவித காவியத்தையேனும் படித்து அவைதரும் அமுதரசம் அருந்துவோமா? அற்ப நிமிஷத்தை ஆயுளாயுடைய யாம் செய்வதென்னே. (76)

வேறு.

இத்துரக சலமனமார் பூபுஜரோ வினிதேத்தற் கிசையாராசை, மெத்தவுறு யாமுமிகு பலத்தினின்யாத் திடமனத்தை மேவா நிற்பேங், தத்துசரை யுடலரிக்கு மேமனுமிப் பிரியவுயிர் தன்னையே மாய்க்கு, மொத்தநண்ப வுலகிலிருந் தவத்தையன்றி மற்றறிஞர்க் குயர்ச்சி யாமோ.

**(போ-ரை.)** இந்தக் குதிரைபோற் சலமன அரசரைப் பூஜித்துப் பிரசன்ன மாக்குதல் அசாத்தியம்; பேராசையராய யாமோ அதிமகத் பலத்திற் கட்டப்பட்ட மனத்தராவேம்; சரையோ உடலைக் கெடுக்கும்; எமனும் இப்பிரிய உயிரை மாய்ப்பன்; தோழனே! பெருந்தவத்தையல்லது அறிஞருக் குயர்ச்சி யொன்றுண்டோ. (77)

வேறு.

மானமு மாழ்கித் தனமழிந் தேற்றல் வறிதுபோ யுறவினர் மடிந்தே, பானிறை பணிய ரேகியெவ் வனமும் பையவே பாறிய பின்னஞ், சானவிப் பயத்திற் பவித்திரக் கலிமா சலமுழைத் தடக்கொடி யிலத்தோ, ரானவெவ் வாசங் கேவலமிஃதே யடையநன் மதியினர்க் குரித்தே.

**(போ-ரை.)** மானங்கெட்டுத் தனமழிந்து யாசகம் வீணாய் உறவினரிறந்து வேலையாட்களொழிந்து யவ்வனமுஞ் சென்றபின் கங்கா தோயத்தாற் புனிதமாய கற்களோடுகூடிய இமாசலக் குகையிடத்துற்ற கொடிவீட்டில் வாசமீயாதோ அவ்விதுவே யடைதல் நல்லறிவினர்க் குரியதாம். (78)

நிலவொளி ரமியந் திருணமார் வனத்தி னிகணடுத் தல மனோ கரமா, நலவரோற் றுமையி லெழுசுகம் ரமியம் நன் மனோ கரமின்கா வியத்தே, சொலுகதை கோபத் துதிகணீர்த் துளிசேர் துயர்தயி னையின்முகம் ரமிய, மெலிபெலா மிரமிய மனித்தனை மனத்தின் மேவுறின் மீண்டிலை சிறிதே.

(பொ-ரை.) நிலவொளி ரம்மியமாம்; புல் நிறைந்த வனத்தலம் மனோகரமாம்; சற்சங்கத்தா லெழும் சுக மிரம்மியமாம்; காவியத்தே சொல் கதை மனோகரமாம்; ஊடற்கோபத்துதித்த கண்ணீர்த்துளி சேர்ந்த துன்ப மனைவியின் வதனம் இரம்மியமாம்; எல்லா மிரம்மிய மாம்; அநித்தத்தன்மை மனத்தின்கண் மேவிடினோ பின் இவ்விடத் தெதுவு மிரம்மியமின்று மென்றுணர்க. (79)

அரமிய தலம்வாழ் வுறவிர மியமெ னன்றுகொல் கீதமே முதல, சிரவிய மலவோ வரிவைதை வாலாற் செனிசுக மிக மகிழ் வலவோ, சருவமுந் துறவர் மற்றுழ லளியின் சலிசிறை வளியலை தீபத், தெரிசுடர் கடுப்பச் சலமென வெணியே யேகி னர் வனநனந் தலையே.

(பொ-ரை.) மேல்வீடு வசிக்க ரம்மியமன்று. கீதமாதிய கேட்க மனோகரமன்று, பிராணசம மங்கையை அங்கையாற் காடாலிங்கனஞ் செயலாலுண்டாஞ் சுக மிகவு மகிழ்வு தாராதா, எனினும், சுழலாநின்ற வண்டின் சலிக்குஞ் சிறகால் உண்டாங் காற்றாலலையுந் தீபச்சுவாலை போற் சஞ்சலமென யாவற்றையு மெண்ணித் துறவிகள் வனஞ்சென் றனர். (80)

8-வது நித்தியாநித்தியவஸ்துவிசாரம் முற்றிற்று.

---

## 9-வது சிவார்ச்சனம்.

தாதையே பழைய பவங்கொடுத் திப்பூ தரணியை யாய் ந்துறு மெமது, காதுறு நெறியை யேனுங்கண் ணெறியைக்

கதுவவே யில்லையத் தகையன், கோதறு விடயக் கரிணிபாற்
காட கூடமா னமதவுட் கரண, வாதுரக் கரியி னிறுவலிற்
சால வாடலெவ் விவன்றரிப் பவனே.

(பொ-ரை.) ஐய! அனாதி சமுசார மாரம்பித்து இம் முப்புவனத்தை ஆராயும் எமது காதின் வழியையுங் கண்ணின் வழியையு மத்தன்மைய னடையவேயில்லை, எத்தன்மையனெனின்! எவ்விவன் குற்றத்தோடுற்ற விடயப் பெண்யானையின்பா லதிதிட கூடாபிமானத்தால் மதத்த சித்தயானையைக் கட்டும் விளையாட்டையவனேயவனே அத்தன்மையனென்க. (81)

தன்னசை யுலவா றீனமி லசனஞ் சற்சன ரொடுசக வாச,
மின்னுப சமவி ரதபலத் ததையே யியற்றனற் சிரவணம் புறத்தே, சன்னமுற் றசையு மனமுமெவ் விவைகள் சார்வுறு மிப்பரி ணமம், மன்னுமெத் தவத்தின் மகிமையோ நெடுங் கான் மனந்தனி னோர்ந்துங் கண்டிலனே.

(பொ-ரை.) தன்னிச்சைப்படி சஞ்சரித்தல், அதைனிய போஜனம், சாதுசங்க சகவாசம், விஷயபோக விரக்தியே முக்கிய பலமாகவுடைய விரதம், வேதாந்த நூற்சிரவணம், பாகியத்தில் மந்தசஞ்சார மனமும் என்னுமிவைகள் எந்த மகத்தபத்தின் பரிபாகமோ அறிந்திலன் நெடுங்கால மோர்ந்தும், இவைகள் மகத்தாய தவத்தின் பயனென்பதாம். (82)

விடயவெவ் விழைவு மடிந்ததொண் மனத்தே விண்டதந்
தோவந்த விளமை, யிடரவ யவத்தே குணங்களுங் குணஞ்ஞ
ரின்றிகிட் பயனதா யேகுந், திடவலிக் காலமி லெமன்கடி
தடுத்தான் செய்வதென் னினியகோ தெரிந்தேன், விடமத
தகன னங்கிரி யுகளம் விடுத்தயற் கதியிலென் பதுவே.

(பொ-ரை.) விடய மனோரதம் அனுபவிக்கக் கிட்டாமல் மனத்தின்கண்ணேயே மடிந்தன; அவயவங்களில் அந்தயவ்வனமுஞ் சென்

றது; வித்யாவிநயாதி குணங்களும் குணங்கவர்வோ ரின்மையின் மாய்ந்தன; பலவானும் சகியாதவனும் காலஸ்வரூபனுமாகிய மிராநின்ற எமனும் கிட்டிவிட்டா னுயிர்கொண்டேக; அந்தோ! இஞ்ஞான்று செய்யத்தக்க தென்னையோ அறிந்திலனே! ஆ! ஆ!! ஆ!!! அறிந்தேன்! அறிந்தேன்!! அறிந்தேன்!!! மதனாந்தகனாகிய உமாநாயகன்றன் பாதாரவிந்தத்வந்த்வங்களை விடுத்து வேறுகதி யில்லவேயில்லை; அதை யினித் தியானிப்பேன். (83)

வேறு.

உலகதி யீச னான வுபர்மக தேவன் மாட்டு
முலகினுள் ளான்மா வான வுயர்சனார்த் தனன்றன் பாலு
முலகுறு பொருளின் பேத வுணர்வெனக் கிலையென் றாலு
முலகுறு நேசம் பால வுடுபதி யுடையன் பாற்றே.

(பொ-ரை) சகத்திற்கு ஈசுரனாகிய மகாதேவரிடத்திலும், சகத்தின் அந்தரான்மாவா யிராநின்ற சனார்த்தனனாகிய மகாவிஷ்ணுவினிடத்திலும், இது வேறுபொருள் இது வேறுபொருள் என்னும் பேதபுத்தியானது எனக்குக் கிஞ்சித்து மின்றாம்; ஆயினும், அன்பானது இளம்பிறை யணிந்த எந்தையிடத்தேயுளது; பேதபுத்தி யில்லாவிடினும் இஷ்டதெய்வமொன்றில் அதிகபற் றிருக்கவேண்டு மென்பதாம்.

வேறு.

ஒலியெலா மொடுங்கு மொள்ளிர வுகளி லொளிமிகு நிலவினால் வெளுத்த, தலமெனு மமரர் நதியினோர் புளினந் தனிற்சுகந் தனினிருந் தினியாஞ், செனுபவப் பெருக்கின் தளர்ச்சியி னானே சிவசிவ சிவவென வரத்த, வொலிபுரி யுட்சார் மிகுதரு பாட்ப வுறுவமென் றுருகுலத் திசையே.

(பொ-ரை.) சப்தமடங்கிய இரவுகளில் பிரகாசியாநின்ற சந்திரிகையால் வெளுத்த தலமாகிய கங்கையின் மணல்மேட்டில் உட்கார்ந்து

கொண்டு சம்சார விஸ்தாரத்சாற் றுக்கிதராய யாம் சிவசிவசிவ என்றாரத்த சப்தம்செய்பவராய் உள்ளடங்கிய மிகுந்த கண்ணீரால் வியாகூலாவஸ்தையை என்று கழிப்போம். இவ்வண்ணம் கிடைப்பின் யாம் கிருதகிருத்தியராவதில் ஐயமின்றாமென்றுணர்க. (85)

திருவெலா மீந்த பின்றரு ணமதாய்த் திகழ்தயை நிறையிரு தயராய், வெருபவ மதனில் விடமமாய்ப் பிறழும் விதிகதியதைநினை பவராய்த், தருநிறை புணிய வனநிறைந் திலகுஞ் சாற்கலை மதிக்கதி ரான, வரிவையொ டிரவை யரன்பத நினைவொண் ணளியராய்க் கழிதரலென்றோ.

(பொ-ரை.) அகில தனங்களையுந் தானஞ்செய்தபின் நற்றயை நிறைந்த இருதயராய்ச் சம்சாரத்தில் விஷமபரிபாகமாய தைவப்பிரவிர்த்தியை ஸ்மரிப்பவராய்ப் புண்ணியாரண்யத்தில் யாம் அரன் சரணாரவிந்தத் தியானத்தையே முக்கிய ரக்ஷணமாக வுடையவராய் வியாபித்த சரற்கால சந்திர கிரணங்களோடுகூடிய இரவை என்று கழிப்போம். (86)

காசியி லமர நதிக்கரை யிருந்தே கந்தையங் கோவணனாகிப், பேசிரு கரங்கள் சிரந்தனிற் குவித்தே பெரியமுப் புரமெரிக் களித்தோ, யேசிவ கவுரி நாயக சம்போ வெழிற்றிரி நயனவந் தருளென், றுசற வரற்றிக் கணமெனத் தினங்களடியனுக் ககலலென் றம்மா.

(பொ-ரை.) கந்தையைக் கோவணமாகவுடையவனாய்க் காசி மகா க்ஷேத்திரத்தில் கங்கையின் கரையிலிருந்து இருகரங்களையுஞ் சிரசிற் குவித்து, முப்புரமெரித்த முதல்வ! சிவ! உமாநாயக! சம்போ! திரிநேத்திர! என்முன் எழுந்தருளிவந்து திருவருள் செய்யவேண்டுமென்று உரக்க அழுது ஒருக்ஷணம்போல் தினங்கள் அடியேனுக்கென்று கழி

யும்; பரமேசனைச் சந்ததம் பணிகின்ற யான் நாட்கழிவதையுங் காணே னுயின் சர்வானர்த்தமும் எனக்கின்றுய்விடு மென்பதாம். (87)

கங்கையிற் படிந்து விபுநினை நற்பூ கனிகளா லருச்சித் துத் தேயங், தங்குள மாகிக் கிரிக்குகைக் கன்மஞ் சமூலத்தி லான்மார மனுமா, யங்கனி யுணியாய்க் குருமொழி ரதனு யரி மகன் றகனநின் னருளால், வெங்கனென் ஞெழிவல் சமகர சாணர் வேலையி லெழுந்துய ரந்தோ.

(பொ-ரை.) கங்கையில் ஸ்நானஞ்செய்து, விபுவாகிய தேவரீரை நல்ல பூ கனிகளாற் பூசித்துத் தியேயமாகிய தேவரீரிடத்தே யுள்ள முள்ளவனுய் மலையின் குகைப்பாறைக் கட்டின் மூலத்தில் ஆன்மாரம னுய்ப் பழம் புசிப்பவனுய் ஆசிரியர் மொழியைச் சிந்திப்பவனுய் மன் மத தகனனே ! தேவரீரினருளால் அடியேன் றுல்லிய காசரணரும் மகரரேகையைப் பாதத்தி லுடையவருமாய அரசரின் சேவையா லெ ழுந்துன்பமென் றெழிவேன். (88)

வே று.

ஒருவ னுகியெவ் வேட்கையை யொழித்தவ னுகிப்
பெரிய சாந்தனுய்க் காதலப் பிக்கைபாத் திரனுய்ச்
சருவ வாசையி னம்பர னுகியே சம்போ
கருமநாசக சமர்த்தனுய்க் கடையமென் றடைவேன்.

(பொ-ரை.) ஒருவனுய்க் கொடிய ஆசையை யொழித்தவனுய்ப் பெரிய சாந்தனுய்க் கைத்தலத்தையே பிக்ஷைப்பாத்திரமாக வுடையவ னுய் அஷ்டதிக்கையே வஸ்திரமாகவுடையவனுய்ச் சம்புவே! கருமநாச சமர்த்தனுய்க் கடையனுய அடியனென்றுவேன். (89)

வே று.

பாணியிலேப் பயிக்ககலம் பயின்றவரா யியல்பாற் பரிசுத்த பயிக்கமதாற் பற்றியகன் முதராய், வேணுமென்ற விடத்தனி

னே வீற்றருளு பவராய் விசுவமதைத் துரும்பெனவே யடிக் கடிகாண் பவராய், நாளுடலை வீடலாா யினுமகண்ட பரமா னந்தவனு பவமதனைப் புரியுமவ ராகிப், பூணுமகா யோகியருக் குமைகொழுந னருளாற் பொலிசுலப யாதோவோர் நெறிபெற வுற் றதுவே.

(போ-ரை.) கையையே பிக்ஷைப்பாத்திரமாக்கினவராய், இயல் பாகவே தூயதாய பிக்ஷையான் மகிழ்பவராய், இஷ்டமான இடங்களி லிருப்பவராய்ச், சகத்தை நிரந்தரம் துரும்பென எண்ணுபவராய்ச், சரீ ரத்தின்கண்ணேயே அகண்ட பரமானந்த அனுபவமதனைப் புரிபவரா யிராநின்ற மகாயோகியருக்கு உமாநாயகன் றிருவருளாலியாதோ ஒரு சுலபமார்க்கமல்லவோ கிடைத்துவிட்டது ஈசன்றிருவருளாலன்றி யித்தன்மை கிடைப்பதரிதென்றபடி. (90)

9-வது சிவார்ச்சனம் முற்றும்.

---

## 10-வது அவதூதசரியை.

கோவண நூறு கூறுபுற் பீறற் கொளுங்கந்தை மற்று மத் தகைத்தே, யாவலில் பயிக்க வுணவெண மிலதா மருந் துயில் வனமயா னத்தே, தாவிறன் வயனுர்த் தடையறத் திரி தல் சந்ததஞ் சிந்தைதண் மையதா, மூவுறில் யோக மகோற் சவத் திறமை மூவுல காளலா லென்றே.

(போ-ரை.) கௌபீனமோ சதகண்ட ஜர்ஜரதரமாய கந்தையாம் (அநேகந் துவாரமுற்ற அதிஜீரணமாய கந்தைத்துணியாம்), குளிர்காற் றுத் தடுக்கவும் மீண்டு மத்தகைய கந்தையேயாம்; சிந்தையு மபே க்ஷையுமற்ற பிக்ஷான்னமே போஜனமாம்; சுடலையினேனும் வனத்தி

னேனும் நித்திரை, சுதந்திரமாய்த் தடையற்ற சஞ்சாரம், சந்ததஞ் சிந்தை சாந்தம், பிரமத்யான மஹோற்சவத்தில் திரத்தன்மையுங் கிடைத்துவிடின் மூவுலகராகாட்சியாற் பயனென்னே. (91)

வேறு.

பிரம வண்டமோ மண்டலீ மாத்திரம் பிறங்கு
மொருவு லோபத்தின் பொருட்டதென் னோவுயர் தவர்கே
வருக யற்றிரி தருதலால் வாரிதி மதனந்
திரம தாயுற விலதென நெளிவதே யாமால்.

(பொ-ரை.) பிரஹ்மாண்டமோ கடாதிபோலளவுறு பரிச்சின்னமாம், தீரதவசிக்கு அது லோபத்தையுண்டாக்கக் கூடியதா என்? அன்றும்; எங்ஙனமெனின், கடலானது சிறுமீன் சுழலுதலால் கலங்குமா? நிச்சயமாய்க் கலங்காதல்லவா! (92)

வேறு.

அம்மையிலக் குமியயலோ னெவனை யேனு மடுத்திரந்தி யென்கணசை யடைய வேண்டாம், விம்முவிட யத்துழல்வா வயநின் னுவர் வேட்கையிலர்க் கென்னுவா யிந்த ஞான்றே, யம்மியைப லாசவிலைப் புடிகை யான வருங்கலத்திற் பாவனமா மகங்கடோறு மிரந்த, செம்மையுறு பொருள்களினு லேயேஞ் ஜீவிகையைச் செய்திடுவா னியாங்கண்மிக விழைவினையுற் றனமே.

(பொ-ரை.) இலக்ஷ்மியம்மையே! அயலோனெவனையேனு மடைந்திரந்தி, என்னிடத்தாசை யடையாதே, விஷயப்பற்றுடையவரன்றோ நின் வயமாவர், ஆசையற்றவர்க் கென்னுவாய் நீ, யாமிப்போது தைத்த பலாசவிலைப்பாத்திரத்தி லிரந்த பவித்திரமாகிய நற்பொருள்களினாலே உயிர்க்காப்புச் செய்ய இச்சையடைந்திருக்கிறோம்; ஆகையால் விரக்தர்களாய எம்படில் நீ யிருந்துதா னென்ன பிரயோஜனம்.

வே று.

மகிமகத் தணைய தாம்புய லதையே மன்பெருந் தலையணை நபமே, தருவிதா னமதா மிவ்வனு கூலத் தண்வளி விசிறி யாஞ் சரற்போ, துகைமதி தீபம் விரதியாம் வநிதை யொடு புணர்ந் துநிதரு சுகியாய்ச், சகலமா பூதி மன்னென யோகி சாந்தனாய்த் துயிலுவ னம்மா.

(போ-ரை.) பூமியே மாசய்யையாம்; புஜலதையே தலையணையாம்; ஆகாசமே மேற்கட்டியாம்; அனுகூலமாய குளிர்காற்றே பங்காவாம்; சாற்காலமதியே தீபமாம்; இத்துணைச் சாமக்கிரியனாய் விரத்திப் பெண்ணொடும் புணர்ந்து சுகியாய்ச் சகலைசுவரிய சம்பன்ன சார்வ பௌம அரசனைப்போல் மகாயோகி சாந்தனாய்த் துயில்வன். (94)

வே று.

ஐயமயில் பவனாகிச் சனநாப்பண் மருவ லாகிலனாய்த் தன் வயசேட் டயனாகிச் சததங், கையுறல்வீ டலின்விரக்த நெறி யையுறு பவனாய்க் கதிமறுகி லெறிகிழிந்த பழையவுடை யினனாய், மையலற வுற்றகந்தை யாசனனாய் மான மதவகங்கா ரந் தணந்த வல்லவனாய்ச் சமமாஞ், செய்யசுக வதிசயத்தே யழுந் தும்விழை வுளனாய்ச் சிறந்தவொரு வருந்தவனு நிகழ்ந்திடுவ னன்றே.

(போ-ரை.) பிக்ஷையெடுத் துண்பவனாய்ச், ஜனமத்தியிற் செல்லாதவனாய்த், தனக்கிஷ்டமான தொழிலோடு மிஷ்டமான சஞ்சார முடையவனாய், தள்ளுத லொன்றைக் கொள்ளுதலின்றி நிரந்தரம் வைராக்யமார்க்க முற்றவனாய், வழியிற்கிடக்கும் கிழிந்தபழைய ஜீரண மான வஸ்திரத்தையுடையவனாய்ப், பழைய கந்தையையே ஆசனமாக வுடையவனாய், மானம் மதம் அகங்கார மற்றவனாய், உபசாந்திச் சுகத்

திலேயே கட்டுப்பட்ட மனத்தையுடையவனாய் ஒரு அருந்தவன் கம்பீரமாய் வீற்றிருப்பன். (95)

சண்டாள னென்னிவனற் றுவிசாதி யலது சதுர்த்தனோ
அரும்பெரிய தாபசனோ வலதென், றண்டாத தத்துவமாய்
தற்பரபுந் தியனோ தக்கவெவ னேனுமொரு யோகவிறை யோ
வென், விண்டாறே யுதிவிகற்ப சற்பவா சால வீணர்களான்
மறுகதனில் வினவுறினுஞ் சினமே, மண்டாராய் மகிழ்வைமனு
மனருமில ராயே மவுனமதா யோகபரர் சென்றுமறு விலரே.

(பொ-ரை.) சண்டாளனோ, இவன் பிராஹ்மணனோ, சூத்திரனோ, அல்லதென் தத்துவ ஆராய்ச்சி செய்யும் புத்திமானோ, அல்லதே தேனுமோர் மகாயோகீசுவரனோ, அல்லதென் பெருந்தபசியோ, என நினைத்தவண்ணம் பேசும் மூடவாயாடிச் சனங்களால ஏசுறினும் வீதியில், கோபமும் மகிழ்ச்சியையு மடையாதவராய் மவுனமுடையராய் யோகிகள் செல்வர். (96)

வேறு.

வாதையின் முயல்வற் றடைதரு மசனம் வனசனல் வாயு
கற் பிதமாங், காதர வுகளுக் கிளம்புலே மேய்ந்து களிப்புறும்
பசுக்கள்பூத் துயின்றே, கோதுறு குடும்பக் கடல்கடக் காற்
றல் கொளுமதி நரர்க்கச்சீ வனத்தை, மோதின னதனைக்
கோலுவர்க் கனிச முழுக்குண முடிவினை யுறுமால்.

(பொ-ரை.) ஹிம்சையும் யத்தனமுமின்றி யெய்தும் போஜனம் வாயுவாய்ப் பிரமனாற் கற்பிக்கப்பெற்றது சர்ப்பங்கட்கு; இளம்புன் முதலிய மேய்ந்து, பசுமுதலியன பூமியிற் றுயிலாநிற்கும்; சம்சார சாகரத்தைத் தாண்டு மாற்றலுடைய நரர்க்கொரு சீவனத்தை வைத்தார்; அதைத் தேடுவதிலேயே தங்கள் குணங்களை முடிவுசெய்து பரமனையும் மறந்து அலைகின்றனர். (97)

கங்கையின் றீர விமகிரிச் சிலையிற் கட்டுறு பதுமவா தன ணுய், மங்கலச் சிவத்யா ஊம்பயின் முறையான் மருவிய யோக வின் றுயிலே, யங்கெனக் கென்னே யச்சுப தினத்தா லாவ தோ வறக்கிழ வரிணஞ், சங்கையற் றெனது வங்கமேற் றனது சுடலம துராய்தல்யாண் டாமோ.

(பொ-ரை.) கங்கையின் தீரத்திலிருக்கும் இமாசலப் பாறையில் பத்தபத்மாசனத்தோடு கூடியவனுய்ப் பிரஹ்மத்யான அப்பியாச விதி யால் யோக நித்திரையை யடைந்தவனுய எனக்கு அந்தப் புண்ணிய தினங்களாற் பலிக்கத்தக்கதென்? யாண்டு அந்தக் கிழமான்கள் பயமற் றனவாய்த் தங்கள் சரீரத்தை என் சரீரத்தில் அரிப்பு நீங்கும்பொருட் டுத் தேய்த்துக்கொண்டிருக்குமோ, அத்தகைய சிவகாருண்யாதி நிறை ந்த பிரஹ்மத்தியானமே வேண்டற்பாலதாம். (98)

புனிதகைக் கலமுந் திரிந்துறு மயிக்கப் பொன்றவி லசன முந் தசதிக், கெனுமக னுடையுஞ் சபலமி லனற்ப விரும்புவித் தற்பமு மெவர்க்கே, மனசங்க வங்கி கரணைக் குவமா மன மகிழ் வர்கடன் னியராய்க், கனதயி னியத்தி னிடார்ப்பெருக் கொழித்தே கருமகின் மூலனம் புரிவார்.

(பொ-ரை.) பவித்திரமாகிய கைத்தலப்பாத்திரமும், சுற்றிச் சுற்றி யெடுத்த அக்ஷயபிக்ஷான்னமும், பத்துத்திசையாய விஸ்தாரவஸ் திரமும், பூமியாய பெரிய அசஞ்சல சய்யையும், எவர்கட்குச் சங்கரஹித அங்கீகாரத்தாற் பரிபக்குவமான மனமோ அம்மனத்தான் மகிழ் வுடையராய அவர் தன்னியராய்த் தைனியதுக்க மற்றவராய்க் கர்மங் களை நாசஞ்செய்வர். (99)

வேறு.

மேதினியென் மாதாவே மாருதமாந் தந்தாய் மித்திரனுந் தேஜசுவே யறலெனுநல் லுறவே, யோதுநப வுடன்பிறப்பே

யுங்களுக்கு முடிவா யுறுபிரணு மாஞ்சலியை யுஞற்றுவனே யாகிப், பாதவுங்கள் சங்கவசத் துற்பனபாக் கியத்தாற் பரவ விலங் கமலமாம் ஞானமத ஞனே, காதியொழி சருவமகா மோகமகி மையன்யான் கவலையறப் பரப்பிரமத் திற்கலக்கின் றனனே.

(பொ-ரா.) மேதினியாய என்றாயே! காற்றாய தந்தையே! தேநக ஞய தேயுவே! நல்ல உறவாய ஜலமே! ஆகாயமாய சகோதர னே! உங்களுக்குக் கடைசியாய் நமஸ்காரம் புரிபவனாய் உங்கள் சங்க வசத்தாலுண்டாய பாக்கியத்தால் எங்குமிலங்கும் நிர்மல ஞானத்தால் கெடுக்கப்பட்ட சர்வமோக மகிமையுடையவனாய யான் கவலையின்றிப் பரப்பிரஹ்மத்திற் கலக்கின்றேன். (100)

## ஸ்ரீ பர்த்ருஹரி வைராக்ய சதகம் முற்றும்.

---

பொற்புறு வீரசேகரன்றன் பூங்கழற்
கற்புறு மடியனே னாற்றிம் மாலையை
யெற்புறு களந்தனி னிசைவிப் பேனொரீஇ
மற்பெறு மனந்தனை மறக்கும் வாஞ்சையே.

வன்னிமாநகரில் வைகுந் தேவர்கள் வாழ்க வாழ்க
வன்னிமாநகரில் வைகுங் குரவர்கள் வாழ்க வாழ்க
வன்னிமாநகரில் வைகு மடியர்கள் வாழ்க வாழ்க
வன்னிமாநகரில் வைகு மியாவரும் வாழ்க மாதோ.

---

உ

சிவமயம்.

# ஸ்ரீ பர்த்ருஹரி வைராக்கியசதகத்தின்

# அரும்பதவுரை.

| கவிநெம்பர். | பதம். | | பொருள். |
|---|---|---|---|
| (1) | சிகை | = | தலை. |
| | திருஷ்ணை | = | ஆசை. |
| | தூஷணம் | = | தோஷங்கூறல். |
| | கவின் | = | அழகு. |
| | வெரு | = | பயம். |
| | சலபம் | = | விட்டிற்பூச்சி. |
| | அவிர்வோன் | = | விளங்குவோன். |
| | இலம் | = | வீடு (இல்லமென்பது இடைகுறைந்து இலமென்றாயிற்று). |
| | பூடணம் | = | ஆபரணம். |
| | அக்ரபாகம் | = | முற்பாகம். |
| | மதன் | = | மன்மதன். |
| (2) | வளவினுள் | = | கிரகத்தினுள். |
| | அயின்றாய் | = | புஜித்தாய். |
| | வாயசம் | = | காகம். |
| | சூசகை | = | குறிப்பு. |
| | வாஞ்சை | = | ஆசை. |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (3) | போழ்ந்தேன் | = தோண்டினேன். |
| | பூதரத்தாது | = பர்வதத்திலுள்ள தாது. |
| | தெண்டிரை | = சமுத்திரம். |
| | நிசி | = இரவு. |
| (4) | கலர் | = துஷ்டர். |
| | ஆலாபம் | = வைதல். |
| | மாவால் | = தனத்தால். |
| | உலமேவி | = இறுமாப்படைந்து. |
| | கிலம் | = கெடுதி. |
| | உலவா | = கெடாத. |
| (5) | எமம் | = பொன். |
| | தம்பிதம் | = ஜடபாவம். |
| | நிஜகுணம் | = தன்னுடைய வித்யாவிநயாதிகுணம். |
| (6) | பொங்களுர் | = மிகுதியாகிய துக்கம். |
| | உயிர் ஜயித்து | = பிராணநிரோதஞ் செய்து. |
| (7) | புக்தம் | = அநுபவம். |
| | தப்தம் | = செய்தல். |
| | சிதிலம் | = நாசம். |
| (8) | பலிதம் | = வெண்மையாகிய நரை. |
| | கைபதமேனி | = கை, கால், சரீரம். |
| (9) | தண்டெழுச்சி | = கூடியூன்றியெழுதல். |
| | சாமோசிப்பான் | = மரணத்தாற் சரீரத்தை விடும்பொருட்டு. |
| (10) | கரா | = முதலை. |
| | விகங்கம் | = பக்ஷி. |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| | விடயபரித்தியாக விடம்பனை | = விஷயங்களை விடுவதைப்பற்றிக் கூறும் ஆடம்பரம். |
| (11) | பவத்தினில் | = சமுசாரத்தில். |
| | அவத்தினில் | = வியர்த்தமாக. |
| (12) | சிரதரம் | = அநேககாலம். |
| | இடர்ப்பொருட்டு | = துக்கத்தின்பொருட்டு. |
| | விழைவு | = ஆசை. |
| (13) | பரிக்கிரகம் | = கொள்ளுதல். |
| (14) | புனற்கணம் | = ஜலத்துளி. |
| | மனனமாளிகை | = மனோராச்சியத்தாற் கற்பிக்கப்பட்ட பெரியவீடு. |
| | வாபி | = நடைகிணறு. |
| | மலர்த்தடம் | = தாமரைப்பொய்கை. |
| | ஆடல்கா | = உத்யானவனம (விளையாடுவதற்குரிய சோலை). |
| (15) | வசனம் | = வஸ்திரம் |
| | சதசகலம் | = நூறுகண்டம். |
| (16) | கூழின்கும்பம் | = பொற்குடம். |
| | வதனம் | = முகம். |
| | சசாங்கன் | = சந்திரன். |
| (17) | கண்ணுதல் | = பரமசிவம். |
| | கதிர்வோன் | = விளங்குவோன். |
| | அம்பாரக்கடு | = அம்பாகிய சர்ப்பத்தின் விஷம். |
| (18) | தவக்கயலும் | = தவ்விச்செல்லாநின்ற அம்மீனமும் |
| | பிசிதம் | = மாம்சம். |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| | அம்மயில்வுறுக | = நன்ருகப் புஜிக்குக. |
| | அருர் | = துக்கம். |
| (19) | கலிதம் | = சேர்க்கப்பட்ட (கூடிய). |
| | சாலியன்னம் | = நெற்சோறு. |
| (20) | உணர்வினர்புகழும் | = சத்துக்களாற் புகழாநின்ற. |
| | தயிதை | = (மனைவி). |
| | நவம் | = புதிது (நவமென்றது வயதினிளமையைக் காட்டும்பொருட்டு). |
| | காராக்கிரகம் | = சிறைச்சாலை. |
| | கணபங்குரம் | = க்ஷணத்தில் நாசமாவது. |
| | யாஞ்சாதைன்ய தூஷணம் | = யாசகத்தா லிரங்கலைத் தூஷித்தல். |
| (21) | தீனுதீனம் | = இரக்கத்தின் வயப்படல். |
| | சிருர் | = சிறுவர். |
| | அம்பரம் | = வஸ்திரம். |
| (22) | குருதரம் | = சிரேஷ்டம். |
| | கணம் | = கூட்டம். |
| | மரைக்கு | = தாமரைக்கு. |
| | மதி | = சந்திரன். |
| | விபுலம் | = விஸ்தாரம், விசாலம். |
| | லச்சாவல்லி | = நாணமாகியகொடி. |
| | குடாரிகை | = கோடாலி. |
| | சடரம் | = வயிறு. |
| | பிடரி | = பாத்திரம். |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (23) | நீதிகர்ப்பவிப்பிரர் | = பூர்வமீமாஞ்சையிற் கூறியபடியொழுகும் பிராமணரால் ஈயப்பட்ட (ஆகுதி செய்யப்பட்ட). |
| | தூமிரம் | = கருமையும் பொன்மையுஞ் சேர்ந்த நிறம். |
| (24) | துங்கம் | = பரிசுத்தம். |
| | அதிட்டிதமாய் | = நிலைப்படுத்தப்பட்டதாய். |
| | கல்லோலம் | = அலை. |
| (25) | கந்தரம் | = குகை. |
| | கந்தம் | = கிழங்கு. |
| | வற்சலை | = மாவுரி |
| | விநயம் | = வணக்கம். |
| | வதை | = கொடி. |
| (26) | கிருபணம் | = தோஷம் (குற்றம்). |
| | பல்லவம் | = தளிர். |
| | விகலவாணி | = பிதற்றுமொழி. |
| | சுத்திரர் | = அற்பர். |
| | பூசய்யை | = பூமியாகிய படுக்கை. |
| (27) | சுலலிதலதை | = மனோகரமாகிய கொடி. |
| | ஊறு | = பரிசம். |
| | கின்னவன்றனிகர் | = துன்புற்ற மிகுந்த ஐசுவரியவான்கள். |
| | கிருபணர் | = லோபிகள். |
| | சந்தாபம் | = துக்கம். |
| (28) | வெளிப்படை. | |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (29) | நிரந்தரம் | = எப்போதும். |
| | முதிதர் | = சந்தோஷமனத்தர். |
| | சங்குலவுளத்தர் | = பின்னியமனமுடையவர். |
| (30) | மர்த்தனம் | = நாசஞ்செய்வது. |
| | பாவனம் | = பரிசுத்தம். |
| | வாரியம்ற்றது | = தடுப்பரிது. |
| | கயம் | = நாசம். |
| | போகாஸ்தைரிய வர்ணனம் | போகத்தின் நிலையற்றதாந் தன்மையை வர்ணித்தல். |
| (31) | அரி | = சத்துரு. |
| | ஆசாரப்பிரம்சம் | = ஆசாரத்தினின்றும் வழுவுதல். |
| | அபயம் | = பயமற்றது. |
| (32) | அங்கனை | = ஸ்திரீ. |
| (33) | நியதம் | = அவசியம். |
| | விவசரை | = வசமற்றவரை. |
| | ஆதி | = மனோதுக்கம். |
| | வியாதி | = சரீரதுக்கம். |
| | விவிதம் | = நானாவிதம். |
| | சுஸ்திரம் | = நன்னிலைபெற்றிருத்தல். |
| (34) | துங்கம் | = பரிசுத்தம், உயர்ச்சி. |
| | தரங்கம் | = அலை. |
| | பங்கம் | = நாசம். |
| | தரலம் | = சஞ்சலம். |
| | அசாரம் | = சாரமற்றது. |
| | நிகிலம் | = யாவும். |
| | பேசலமனம் | = இரக்கமுடைய மனம். |

| கவிநெம்பர். | பதம். | | பொருள். |
|---|---|---|---|
| (35) | காயிகள் | = | சரீரிகள் (ஜீவர்கள்). |
| | கார்க்குழு | = | மேகக்கூட்டம். |
| | பங்குரமாகும் | = | நாசமாகும். |
| | லாலசை | = | வாஞ்சை. |
| (36) | களம் | = | கழுத்து. |
| | துல்லியம் | = | சமானம். |
| | ஆசக்தசித்தர்கள் | = | பிரியமுடையமனத்தர். |
| (37) | தனு | = | சரீரம். |
| | விஷயம் | = | ஏற்றத்தாழ்வு. |
| | ரேரே | = | அடே! அடே!! (இது நீச சம்போதனம். |
| | கிஞ்சிலும் | = | அற்பமும். |
| (38) | புலிப்பேடு | = | பெண்புலி. |
| | ஆமயம் | = | ரோகம் (நோய்). |
| (39) | விசதம் | = | நின்மலம். |
| | பகுவகை | = | அநேகவகை. |
| (40) | விரசம் | = | ரசமற்றது. |
| | அனவரதம் | = | ஸதாகாலம். |
| | கணவிஞசி | = | அதிசீக்கிரத்தில் நாசமாவது. |
| | காலமகிமானுவர்ணனம் | = | காலனுடைய மகிமையை வர்ணித்தல். |
| (41) | சவி | = | அழகு. |
| | சாமந்தம் | = | சிற்றரசு. |

(42) வெளிப்படை.

| விநேம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (43) | தினகரன் | = சூரியன். |
| | குருசெயல் | = மிகுதியான செய்கை. |
| | விபத்தி | = ஆபத்து. |
| | பீதி | = பயம். |
| | வெண்ணறை | = வெண்ணிறமாகிய கள். |
| | உன்மத்தம் | = ஒன்றையுந்தெரியாமல்மதமோடிருத்தல் |
| (44) | வெளிப்படை. | |
| (45) | பரவுலகு | = சுவர்க்கலோகம். |
| | உஞற்றேம் | = செய்யேம். |
| | யுகம் | = இரண்டு. |
| | வறிதே | = வீணாக. |
| (46) | நறுக்கு | = கெடுக்கானின்ற. |
| | கயத்தின் | = யானையின். |
| | பாழாலயம்* | = பாழ்ங்கோயில். |
| (47) | அரிவையர் | = ஸ்திரீகள். |
| | காரிகள் | = காகங்கள். |
| (48) | பதனம் | = நாசம். |
| | தருக்கள் | = விருக்ஷங்கள். |
| (49) | பாலதை | = சிசுத்தன்மை (குழந்தைப்பருவம்). |
| | கிழமை | = விருத்தப்பருவம். |
| (50) | காமவிரசிகன் | = காமத்தின் மூழ்கினோன். |
| | விபவன் | = ஐசுவரியவான். |
| | தனு | = சரீரம். |
| | ஈற்றினில் | = முடிவில். |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (51) | யதி | = சன்யாசி. |
| | நிருபதி | = அரசன். |
| | சம்வாதம் | = சம்பாஷணம் (பேசுதல்). |
| | ராதி | = தனம். |
| | ஆசை | = திசை. |
| (52) | வாணி | = வாக்கு. |
| | வாதிதர்ப்பம் | = வாதிகளின் மதம். |
| | பாடவம் | = சாமர்த்தியம். |
| | ஆஸ்தை | = ஆதரவு (அன்பு). |
| (53) | துகூலம் | = வஸ்திரம். |
| | இலம்பாடு | = தரித்திரம். |
| (54) | பலம் | = பழம். |
| | அயில்வதற்கு | = புசிப்பதற்கு. |
| | அறல் | = ஜலம். |
| | கலர் | = துஷ்டர். |
| | விநயம் | = வணக்கம் |
| | நவதனம் | = புதிதாகிய தனம். |
| (55) | பயிக்கம் | = பிக்ஷான்னம். |
| | மகி | = பூமி. |
| (56) | நடர் | = நாட்டியம் செய்பவர். |
| | விடர் | = விஷயாசக்தர். |
| | காயகர் | = பாடுவோர். |
| | அவைக்கு | = சபைக்கு. |
| | அருகர் | = யோக்கியர். |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (57) | சதுர்த்தசபுவனம் | = பதினான்குலகம். |
| | புரம் | = பட்டணம். |
| | மதச்சுரம் | = மதமாகிய சுரநோய். |
| | ஸம்ஸ்தாபிதம் | = நன்றாக நிலைநிறுத்தப்பட்டது. |
| | யயாதி | = சந்திரவம்சத்திலுள்ள ஓரரசன். |
| (58) | சுட்டினால் | = கூட்டத்தால். |
| | செயிர் | = துன்பம். |
| (59) | வலயிதம் | = சுற்றப்பட்டது. |
| | காவலர் | = அரசர். |
| | அதமர் | = கீழ்ப்பட்டோர். |
| (60) | மதன்றனரி | = மன்மதனுடையசத்துரு(பரமசிவன்). |
| | சிதகம் | = வெண்மையாகிய தலையோடு. |
| | சம்போதனம் | = விளி. |
| | நியமனம் | = நியமித்தல். |
| (61) | சிந்தாமணி | = சிந்தித்ததைக் கொடுக்கப்பட்டமணி. |
| | விவிக்தசங்கற்பம் | = நானாவிதமாகிய சங்கற்பம். |
| (62) | வெளிப்படை. | |
| (63) | ஊர்மி | = அலை. |
| | கயபவாதி | = நாசமாகநின்ற சமுசாரத்திலுள்ள இன்பம். |
| (64) | பிறைச்சிரோமணியன் | = சந்திரனைச்சிரத்தில் மணியாக அணிந்த பரமசிவன். |
| | மாகதரங்கிணி | = தேவநதி (கங்கை). |
| | தடித்தின்வரி | = மின்னல். |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (65) | பூபாலர் | = அரசர். |
| | புருவவிலம் | = புருவமாகிய குடிசை. |
| | சலே | = சஞ்சலே, வியபிசாரி (ஈண்டு லக்ஷ்மியைக் கொள்ளத்தக்கது). |
| | கஞ்சுகம் | = சட்டை. |
| | பவனம் | = வீடு. |
| | அஸ்தம் | = கை. |
| (66) | தாக்கிணத்தியர் | = தக்ஷிணதேசத்திலுள்ளவர். |
| | விகற்பமருவறும் நிட்டை | = நிர்விகற்ப சமாதி. |
| (67) | மித்திரர் | = சிநேகிதர். |
| (68) | மாரன் | = மன்மதன். |
| (69) | அஜரம் | = ஜரையற்றது. |
| | அனுஷங்கி | = சம்பந்தி. |
| | யசசு | = கீர்த்தி. |
| (70) | நபம் | = ஆகாசம். |
| (71) | திவக்ராமம் | = தேவநகரம். |
| | பலதம் | = பலத்தைக் கொடுப்பது. |
| | விப்ரமம் | = மயக்கம் (விசேஷமாகிய பிரமம்). |
| (72) | திருவுளமேரு | = ஐசுவரியம் நிறைந்த மேருமலே. |
| | கிராகம் | = முதலே. |
| | மகரம் | = திமிங்கலம். |
| | தரணிதரம் | = பர்வதம். |
| | கரிகலபகர்ணம் | = யானேக்கன்றின் காது. |
| | திருதம் | = நிச்சலம். |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (73) | எயிறு | = பல். |
| (74) | தவளிதம் | = வெண்மை. |
| | சடுதி | = சீக்கிரம். |
| | பரிபவம் | = அவமானம். |
| | மிலேச்சர் | = சண்டாளர். |
| (75) | விதுஷன் | = வித்வான் (அறிஞன்). |
| | கூபம் | = கிணறு. |
| (76) | வெளிப்படை. | |
| (77) | துரகம் | = குதிரை. |
| | பூபுஜர் | = அரசர். |
| (78) | ஜானவிப்பயம் | = கங்காஜலம். |
| | இமாசலம் | = ஹிமவத்பர்வதம். |
| | தோயம் | = ஜலம். |
| (79) | வெளிப்படை. | |
| (80) | சிரவியம் | = கேட்கத்தருந்தது. |
| | தைவரல் | = தழுவுதல். |
| | துறவர் | = யதிகள். |
| | அளி | = வண்டு. |
| | கடுப்ப | = சமானமாக. |
| | நனந்தலை | = நடு (மத்தி). |
| (81) | கரிணி | = பெண்யானை. |
| | ஆதுரம் | = பீடிக்கப்பட்டது. |
| (82) | சகவாசம் | = ஒற்றித்திருத்தல். |
| | உபசமவிரதபலம் | = விஷயபோகத்திலுள்ள வைராக்கியமாகிய பலம். |

| விநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (83) | விண்டது | = நாசமாயது. |
| | அகோ | = ஆச்சரியம். |
| | மததகனன் | = மன்மததகனன் (பரமசிவன்). |
| | அங்கிரியுகளம் | = இரண்டுபாதம். |
| (84) | பாலவுடுபதி | = பாலசந்திரன். |
| | உடு | = நக்ஷத்திரம் |
| (85) | புளினம் | = மணல். |
| | ஆகுலம் | = பயம் (துக்கம்). |
| (86) | வெளிப்படை. | |
| (87) | வெளிப்படை. | |
| (88) | தேயம் | = தியானிக்கப்பட்ட வஸ்து. |
| | கன்மஞ்சம் | = கல்லாகிய கட்டில். |
| | அரிமகன் | = விஷ்ணுவின் புத்திரன் (மன்மதன்). |
| | சமகாசரணம் | = சமமாகிய கை காலையுடைய (இதர) ஜனங்கள், அல்லது மகாரோகை யைக் காலிலுடைய தனிகர். |
| (89) | வெளிப்படை. | |
| (90) | வெளிப்படை. | |
| (91) | வெளிப்படை. | |
| (92) | மண்டலீ | = பிம்பம். |
| | கயல் | = மீன். |
| | வாரிதி | = சமுத்திரம். |
| (93) | பலாசவிலை | = பலாசமென்னும் ஓர் விருக்ஷத்தின் இலை. |
| | புடிதை | = தொன்னை, |

| கவிநெம்பர். | பதம். | பொருள். |
|---|---|---|
| (94) | புயலதை | = புறமாகிய கொடி. |
| | மன்னென | = அரசனைப்போல். |
| (95) | காப்பண் | = கடு. |
| (96) | சதுர்த்தன் | = சூத்திரன். |
| | தாபசன் | = தபசையுடையவன். |
| | தண்டாத | = நீங்காத. |
| | மறுகு | = தெரு. |
| (97) | வனசன் | = பிரமன். |
| | கோலுவர் | = தேடுவர். |
| | அனிசம் | = மிகுதி. |
| (93) | அரிணம் | = மான். |
| (99) | தசதிக்கு | = பத்துத்திசை. |
| | நின்மலனம் | = காசம். |
| | மேதினி | = பூமி. |
| (100) | மாருதம் | = காற்று. |
| | அறல் | = ஜலம். |
| | பிரணமாஞ்சலி | = நமஸ்காரம். |

ஸ்ரீ பர்த்ருஹரி
வைராக்கியசதக அரும்பதவுரை
முற்றிற்று.

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩ | ௫௯ | பயினின்றி | பயனின்றி |
| ௫ | ௨௩ | தயையுந் | தையுந் |
| ௯ | ௪௦ | ாருண்பத்தை | தாருண்யத்தை |
| ,, | ௨௫ | மலையொலி | யலையொலி |
| ,, | ௨௯ | கடற்பரி | கடப்பரி |
| ௧௦ | ௮ | னௌதனிறே | னௌதனிறே |
| ௧௭ | ௨ | மூண்டா | மூண்டாம் |
| ௫௫ | ௨௮ | பேசனவ் | பேசவை |
| ௫௩ | ௭ | வையே | வையோ |
| ௪௨ | ௨௦ | லென்றே | லென்னே |
| ௪௫ | ௭ | தவர்கே | தவர்க்கே |
| ௬௮ | ௨௧ | பவனுய்ச், ஐ | பவனுய்ச், ச |

| கவிநெம்பர். | பதம். | | பொருள். |
|---|---|---|---|
| (94) | புயலதை | = | புஜமாகிய கொடி. |
| | மன்னென | = | அரசனைப்போல். |
| (95) | நாப்பண் | = | நடு. |
| (96) | சதுர்த்தன் | = | ருத்திரன். |
| | தாபசன் | = | தபசையுடையவன். |
| | தண்டாத | = | நீங்காத. |
| | மறுகு | = | தெரு. |
| (97) | வனசன் | = | பிரமன். |
| | கோலுவர் | = | தேடுவர். |
| | அனிசம் | = | மிகுதி. |
| (98) | அரிணம் | = | மான். |
| (99) | தசதிக்கு | = | பத்துத்திசை. |
| | நின்மூலனம் | = | நாசம். |
| | மேதினி | = | பூமி. |
| (100) | மாருதம் | = | காற்று. |
| | அறல் | = | ஜலம். |
| | பிரணமாஞ்சலி | = | நமஸ்காரம். |

ஸ்ரீ பர்த்ருஹரி
வைராக்கியசதக அரும்பதவுரை
முற்றிற்று.

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௧௬ | பயினின்றி | பயனின்றி |
| ௩ | ௨௪ | தையுஞ் | தையுஞ் |
| ௫ | ௪௦ | ாருண்பத்தை | தாருண்யத்தை |
| ,, | ௨௫ | மலையொலி | யலையொலி |
| ,, | ௨௯ | கடற்பரி | கடப்பரி |
| ௧௰ | ௮ | ணெதனிறே | ளெதனிறே |
| ௧௭ | ௨ | முண்டா | முண்டாம் |
| ௩௰ | ௨௮ | பேசணவ் | பேசவை |
| ௩.௪ | ௭ | வையே | வையோ |
| ௪௨ | ௨௦ | லென்றே | லென்னே |
| ௮௩ | ௭ | தவர்கே | தவர்க்கே |
| ௪௪ | ௨௧ | பவனைய்ச், ஜ | பவனைய்ச், ச |